சந்திரா

# தமிழ் உரைநூல்

## நான்காம் வகுப்பு

அரசினரின் நான்காம் வகுப்புத் தமிழ்ப் பாட நூலில் உள்ள உரைநடைப் பாடங்களுக்கு அருஞ்சொற்பொருள், மொழிப் பயிற்சி, வினா-விடை, இலக்கணக் குறிப்பு, செய்யுள்களுக்குச் சொற்பொருள், கருத்துரை, வினா-விடை ஆகியவை அடங்கியுள்ளன.



ஆசிரியர் :

பு. செ. அல்லியரசி

ஆசிரியை, அர்ச். பிரான்சிஸ் சேவியர் உயர்நிலைத் துவக்கப்பள்ளி,
சென்னை–15.




சுதந்திரா பதிப்பகம்

பப்ளிஷர்ஸ் & புக்செல்லர்ஸ்

செவ்வாய்ப்பேட்டை : : சேலம்–2

பதிப்புரிமை] 1969 [விலை : 55 காசுகள்

# முன்னுரை

அரசியலார் அண்மையில் வெளியிட்டுள்ள நான்காம் வகுப்புத் தமிழ்ப் பாட நூலில் வந்துள்ள உரைநடைப் பாடங்களுக்கு அருஞ்சொற்பொருள், மொழிப் பயிற்சி, வினா-விடை ஆகியவைகளும், செய்யுளுக்குச் சொற்பொருள், கருத்துரை, வினா-விடை ஆகியவைகளும், இவ்வகுப்புக்குத் தேவைப் படும் இலக்கணக் குறிப்புகளும், இவ்வகுப்பில் படிக்கும் குழந்தைகள் எளிதில் படித்தறிந்து கொள்ளக்கூடியவாறு, மிகத் தெளிவாக, எளிய சொற்களைப் பயன்படுத்தி இவ்வுரைநூல் எழுதப் பட்டிருக்கிறது.

இவ்வுரைநூல் தனிச் சிறப்புடன் விளங்க வேண்டும் என்பதற்காகவும், இதை வாங்கிப் படிக்கும் குழந்தைகள் தேர்வில் உறுதியாக வெற்றி பெற வேண்டும் என்பதற்காகவும், இதில் அருஞ்சொற் பொருள் விரிவாகவும், மொழிப் பயிற்சி அதிக மாகவும், பாடநூலில் தரப்பட்டுள்ள வினாக்களுக்கு மட்டுமின்றி, பாடத்திலுள்ள செய்திகள் முழுவதை யும் தழுவிய புதிய வினாக்கள் சேர்த்து, அவற்றிற் குரிய விடைகளும் தரப்பட்டிருக்கின்றன.

இதனை மேற்பார்வையிட்டுக்கொடுத்த வித்வான் பு. செல்வராசனார் அவர்கட்கு எம் நன்றி உரித் தாகுக. இந்த உரைநூலை நான்காம் வகுப்புக் குழந்தைகள் வாங்கிப் பயன்படுத்துமாறு செய்யும் வண்ணம் துவக்கப்பள்ளி ஆசிரியர்களையும் பள்ளிக் கூட நிர்வாகிகளையும் வேண்டிக் கொள்கிறோம்.

பதிப்பகத்தார்.

# பொருளடக்கம்

## உரைநடைப் பகுதி



## செய்யுட் பகுதி

# சந்திரா தமிழ் உரைநூல்

## நான்காம் வகுப்பு

## 1. இறை வணக்கம்

### அருஞ்சொற்பொருள்

**எங்கும்** - எல்லா இடங்களிலும்
**நிறையும்** - பரவி உள்ள
**இறையவனே** - கடவுளே
**எல்லாம்** - எல்லாவற்றையும்
**அறியும்** - தெரிந்து கொள்ளும்
**மறையவனே** - மறைபொருளாக இருப்பவனே
**இங்கு** - இந்த உலகத்தில்
**உன் அருளே** - உன் கருணையை
**வேண்டுவனே** - வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்
**என்னைக் காப்பாய் ஆண்டவனே—**
**பண்பும்** - நல்ல குணத்தையும்
**பயனும்** - நல்ல பயன்களையும்
**நிறைத்திடுவாய்** - நிறையக் கொடு
**பழியாம்** - குற்றமாகிய
**செயலை** - செயல்களை
**குறைத்திடுவாய்** - நீக்கிவிடு
**நண்பும்** - நல்லவருடன் கூட்டுறவுடன் இருப்பதையும்
**நலனும்** - நன்மைகளையும்
**வளர்த்திடுவாய்** - வளரச் செய்
**நாளும்** - தினந்தோறும்
**புகழை** - பெருமையை
**வளர்த்திடுவாய்** - பெருகும்படி செய்.

கடவுளை வணங்குகின்ற இந்தப் பாடலை எழுதியவர் உயர்திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை. இவர் மகா வித்துவான் என்றும், சிந்தாமணிச் செல்வர் என்றும் அறிஞர்களால் புகழப்படுபவர். முதுபெரும் புலவராகிய இவர் இப்போது நம்மிடை வாழ்ந்து வருகிறுர்.

### வினு–விடை

**1. இறைவனுடைய தன்மைகள் யாவை?**

இறைவன் எங்கும் நிறைந்தவன், எல்லாம் அறிந்தவன், மறைபொருளாய் இருப்பவன் என்பவை இறைவனுடைய தன்மைகள் ஆகும்.

**2. ஆசிரியர் இறைவனிடம் என்ன வேண்டுகிறுர்?**

"இந்த உலகத்தில் உன் கருணை வேண்டும். என்னைக் காக்கவேண்டும். நல்ல குணத்தையும் நல்ல பலன்களையும் நான் நிறையப் பெறவேண்டும். நல்லவர் கூட்டுற

வும், நன்மைகள் பலவும் என்னிடம் வளரவேண்டும். எனது புகழ் தினந்தோறும் பெருகவேண்டும்'' என்று ஆசிரியர் இறைவனிடம் வேண்டுகிருர்.

## 2. கல்வி

### அருஞ்சொற்பொருள்

**கற்பவை** - படித்துக் கொள் பவை
**உணர்த்தும்** - தெரிவிக்கும்
**பாகுபாடு செய்து** - பிரித்து
**புகழ்வர்** - பெருமையாகப் பேசுவர்
**இகழ்வர்** - தாழ்வாகப் பேசுவர்
**நாடி** - ஆராய்ந்து
**தோற்றம்** - உருவம்
**ஆடவர்** - ஆண்கள்
**இருபாலார்** - ஆண்பால் பெண் பால் ஆகிய இரண்டு வகை யினர்
**இன்றியமையாதது** - இல்லா மல் முடியாதது
**சுற்றத்தார்** - உறவினர்
**வெள்ளத்தால்போகாது** - வேக மாகப் பெருகிவரும் தண்ணீ ரால் அடித்துக் கொண்டு போகாது
**வெந்தணலால்** - கொடிய நெருப்பால்
**வேகாது** - வெந்து போகாது
**வேந்தராலும்** - அரசராலும்
**கொள்ளத்தான்** - எடுத்துக் கொள்ள
**இயலாது** - முடியாது
**கொடுத்தாலும்** - பிறருக்குக் கொடுத்துக்கொண்டே இருந் தாலும்
**நிறைவொழிய** - அதிகம் ஆகுமே தவிர
**குறைபடாது** - குறைந்து விடாது
**கள்வர்க்கோ மிக அரிது** - திரு டர்களுக்கோ திருடிக்கொள் வதற்கு மிகவும் கடினமானது
**காவலோ மிக எளிது** - பாது காப்பதோ மிகவும் எளிமை யானது
**உள்ளத்தே** - மனத்திலே
**கல்வி என்னும் பொருள் இருக்க—**
**உலகெல்லாம்** - உலகம் முழு வதும்
**பொருள்தேடி** - செல்வத்தைத் தேடி
**உழல்வது ஏனோ** - துன்பப் படுவது எதற்காக?

### வினு—விடை

**1. கல்வியால் உண்டாகும் நன்மைகள் யாவை?**

கல்வி கற்பதால் நம் அறிவு ஓங்கி வளரும். நல்லவை, தீயவைகளைப் பிரித்து அறியலாம். கல்வியால் நல்ல ஒழுக்கமும் நல்ல குணமும் உண்டாகும். நல்ல பேச்சுப் பேசவும், நல்ல செயல் செய்யவும் பழக்கம் ஏற்படும்.

**2. கல்வி கண்ணைப்போல உதவுவது எப்படி?**

நல்லவை தீயவைகளை நாடி அறிவதில் கல்வி நமக்குக் கண்ணைப்போல் உதவுகிறது.

**3. கண்ணுக்கும் கல்விக்கும் வேறுபாடு யாது?**

கண்ணே பொருள்களின் வெளித் தோற்றத்தை அறிய மட்டும் நமக்குப் பயன்படும். கல்வியோ, மறைந்துள்ள உண்மைகளையும் தெரிந்துகொள்ளப் பயன்படும்.

**4. கல்வி கற்றவர் அடையும் சிறப்பு யாது?**

கல்வி கற்றவர் செல்லும் இடத்தில் எல்லாம் சிறப்பு அடைவர். அவர்களுக்கு எந்த ஊரும் சொந்த ஊராகும்; எல்லாரும் சுற்றத்தவர் ஆவர்.

**5. நம் அறிவும் பண்பும் வளர்வது எப்படி?**

கல்வி கற்கத் தொடங்கும்போது சிறிது கடினமாய் இருக்கும். ஆயினும், கற்பதை விட்டுவிடாமல் மனம் தளராமல் கற்போமானால், நம் அறிவும் பண்பும் வளரும்.

**6. கல்விப்பொருளின் சிறப்பு எவ்வாறு விளக்கப் படுகிறது?**

"கல்விப் பொருள் வெள்ளத்தில் அழிந்து போகாது; தீயில் எரியாது; அரசரால் அதைப் பறித்துக் கொள்ள முடியாது? பிறருக்குக் கொடுத்தாலும் அதிகமாகுமே ஒழியக் குறையாது; திருடர்களால் திருடமுடியாது. அதைப் பாதுகாப்பது மிகவும் எளிது" என்று கூறிக் கல்வியின் சிறப்பை ஒரு புலவர் விளக்கியிருக்கிறார்.

**7. செல்வப் பொருளைக் காட்டிலும் கல்விப்பொருளே சிறந்தது – காரணம் என்ன?**

செல்வப் பொருளைக் காட்டிலும் கல்விப் பொருளே சிறந்தது. செல்வம் வெள்ளத்தால் அழியும்; தீயால் எரிக்கப்படும்; அரசரால் பறிமுதல் செய்யப்படும்; திருடரால் களவாடப்படும்; கொடுத்தால் குறையும். கல்விக்கோ இக்கேடுகள் இல்லை.

**8. எதிர்ச் சொற்களை எழுது:**

| | |
|---|---|
| நல்லவை × தீயவை | புகழ்வர் × இகழ்வர் |
| சிறப்பு × இழிவு | கடினம் × எளிமை |
| பெரிய × சிறிய | கற்றவர் × கல்லாதவர் |
| நல்ல × தீய | அரிது × எளிது |

### இலக்கணம்

இந்தப் பாடத்தின் முதற்பத்தியிலுள்ள உயிர் எழுத்துகளும், மெய்யெழுத்துகளும் :

| உயிர் | மெய் |
|---|---|
| அ ஆ இ உ எ ஒ ஓ | க் ங் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் ழ் ள் ற் ன் |

## 3. எனது கப்பற்பயணம்–I

### அருஞ்சொற்பொருள்

நகரம் - மிகப் பெரிய ஊர்
வாணிகம் - வியாபாரம்
திரட்டினர் - சேர்த்தார்
ஈட்டிய - சம்பாதித்த
ஊதாரித்தனம் - வீண் செலவு செய்தல்
புயற்காற்று - பெருங்காற்று
சிதைந்து - அழிந்து
களைப்பாறினேன் - களைப்பு + ஆறினேன்—சோர்வை நீக்கிக் கொண்டேன்.
ஓடை - நீர் ஓடும் கால்வாய்
பருகி - குடித்து
மகிழ்ந்தேன் - சந்தோஷம் அடைந்தேன்.
புன்னகை - பல் வெளியே தெரியாதபடி சிரித்தல்
இறுகப் பற்றிக் கொண்டு - அழுத்திப்பிடித்துக்கொண்டு
மூர்ச்சையாய் - மயக்கமடைந்து
உறக்கம் - தூக்கம்.

### வினா-விடை

**1. சிந்துபாது இளமையில் எவ்வாறு இருந்தான் ?**

சிந்துபாது இளைஞனாய் இருந்தபோது அவன் தந்தை இறந்து விட்டார். அவன் தீயவர்களுடன் பழகினான்; ஊதாரித்தனமாகச் செலவழித்தான். அதனால், தந்தை சேர்த்து வைத்த செல்வத்தை இழந்து ஏழையானான்.

**2. சிந்துபாது ஏன் கப்பற் பயணம் செய்தான் ?**

சிந்துபாது தான் இழந்த பொருளைச் சம்பாதிப்பதற்காகவே கப்பற் பயணம் செய்தான். அவன் வணிகர் சிலருடன் கப்பல் ஏறிக் கடல் கடந்த நாடுகளில் வாணிகம் செய்து பொருள் சம்பாதித்தான்.

**3. சிந்துபாதுக்கு ஏற்பட்ட தொல்லை யாது ?**

ஐந்தாம் பயணத்தில் சிந்துபாது ஏறிச் சென்ற கப்பல் புயல் காற்றால் சிதைந்து கடலில் மூழ்கிற்று.

அவனைக் கடல் அலைகள் அடித்துச் சென்று ஒரு தீவின் கரையில் ஒதுக்கின.

**4. சிந்துபாது, கிழவனை எப்படிச் சந்தித்தான்?**

சிந்துபாது கரையேறிச் சிறிது களைப்பாறினான்; பிறகு தீவைச் சுற்றிப் பார்த்தான்; பழமரங்கள் அங்கு நிறைய இருந்தபடியால், சில பழங்களைப் பறித்துத் தின்று பசியாறினான்; அங்கு ஓடையில் ஓடிய நீரைக் குடித்தான். அந்த ஓடையின் கரையில் ஒரு கிழவன் இருந்தான். அவனும் கப்பல் உடைந்து தப்பிப் பிழைத்தவன் என்று எண்ணி அவனை நெருங்கி விசாரித்தான்.

**5. கிழவன் சிந்துபாதிடம் என்ன கூறினான்?**

தன்னை முதுகில் சுமந்து ஓடையின் அக்கரையில் கொண்டுபோய் விடும்படி கிழவன் சிந்துபாதிடம் வேண்டினான். அவனிடம் இரக்கம் கொண்ட சிந்துபாது அவனை முதுகில் சுமந்து அக்கரையை அடைந்தான்.

**6. கிழவன் என்ன செய்தான்?**

அக்கரை அடைந்த சிந்துபாது கிழவனை இறங்கச் சொன்னான். கிழவனோ சிந்துபாதின் கழுத்தைத் தன் கால்களால் இறுக்கிப் பிடித்துக்கொண்டு, இறங்க மறுத்துவிட்டான். சிந்துபாது மூர்ச்சையாய் விழுந்தும் கிழவன் இறங்கவில்லை. சிந்துபாது மூர்ச்சை தெளிந்து எழுந்ததும் மரநிழலுக்குத் தன்னைக் கொண்டுபோகும்படி கிழவன் கட்டளையிட்டான். இரவு வந்த பிறகும் அவன் இறங்கவில்லை. சிந்துபாது தரையில் படுத்து உறங்கிய போதும், கிழவனும் கழுத்தை விடாமல் உறங்கினான். மூன்று நாட்கள் இவ்வாறு கழிந்தன.

## 4. எனது கப்பற்பயணம்–II

### அருஞ்சொற்பொருள்

**சுரைக்குடுக்கை** - உள் சதைகளை எடுத்துவிட்டுக் காயவைத்த சுரைக்காய்க் குடுவை
**உற்சாகம்** - பூரிப்பு
**நெகிழ்ந்தன** - தளர்ந்தன
**மீகாமர்** - கப்பல் தலைவர்
**அளித்தார்** - கொடுத்தார்
**திருவருள்** - கருணை.

### வினா–விடை

**1. சிந்துபாது கிழவனிடமிருந்து எப்படித் தப்பினான்?**

நான்காம் நாள் சிந்துபாதுக்கு அத்தீவில் ஒரு சுரைக்குடுக்கை கிடைத்தது. அதில் அங்கு நிறையப் பழுத்

திருந்த திராட்சைப் பழங்களைப் பிழிந்து சாற்றை அக் குடுவையில் நிரப்பினான்; மறுநாள் அதைக் குடித்துப் பாடி ஆடினான். அதைக்கண்ட கிழவன் சிந்துபாதிடம் மிச்சமாயிருந்த சாற்றை வாங்கிக் குடித்துப் பாடி ஆடத் தொடங்கினான். அவன் கால்கள் தளர்ந்தன. சிந்துபாது உடனே கிழவனைக் கீழே தள்ளி அடித்துக்கொன்றான்.

**2. அத்தீவிலிருந்து சிந்துபாது எப்படித் தப்பினான் ?**

கிழவனைக்கொன்ற மறுநாள் அந்தக் கடற்கரை வழியாக ஒரு கப்பல் வந்தது. சிந்துபாது கரையில் நின்று துணியை வீசிக் கப்பலை அழைத்தான். கப்பல் தலைவன் சிந்துபாதைக் கப்பலில் ஏற்றிக்கொண்டான்; உணவு அளித்தபின், சிந்துபாதின் வரலாற்றைக் கேட்டான். கிழவனிடமிருந்து தப்பியது கடவுளின் கருணையால்தான் என்று கப்பல் தலைவன் கூறினான். சிந்துபாது கடவுளுக்கு நன்றி செலுத்தினான்.

**3. பொருள் எழுது :**

அக்கரை - அந்தக் கரை. அக்கறை - கவனம். ஏரி - நீர் நிலை. ஏறி - மேலே ஏறி. இரந்து - பிச்சை எடுத்து. இறந்து - மரணம் அடைந்து. கரை - நீர்நிலைகளின் கரை. கறை - அழுக்கு, குற்றம்.

**4. சரியான சொற்களைக் குறிப்பிடு:**

காட்சி, நிரப்பி, சாற்றை என்பவை சரியான சொற்கள். மற்றவை பிழையானவை.

### இலக்கணம்

**இவற்றைச் சேர்த்து எழுது :**

| | |
|---|---|
| ச்+ஐ=சை | த்+இ=தி. |
| ஞ்+ஒ=ஞொ. | ந்+ஔ=நௌ. |
| ட்+ஏ=டே. | த்+ஐ=தை. |
| ண்+ஒ=ணெ. | ம்+இ=மி. |

## 5. வால் இழந்த நரி

### அருஞ்சொற்பொருள்

குடியானவர் - பயிர்த் தொழில் செய்பவர்
கருதினார் - நினைத்தார்
சிக்கி - அகப்பட்டு
இயலாமல் - முடியாமல்
ஏளனம் - கேலி

| | |
|---|---|
| ஊளை - நரி இடும் கூச்சல் | விந்தை - விசித்திரம் |
| அச்சம் இன்றி - பயம் இல்லாமல் | இறைச்சி - மாமிசம் |
| | பலியாமை - நிறைவேருமை |

## வினு-விடை

**1. நரி ஒவ்வொரு நாளும் என்ன செய்தது?**

ஒரு குடியானவர் தம் நிலத்தில் வெள்ளரிக் கொடிகளைப் பயிர் செய்திருந்தார். அக்கொடிகளில் வெள்ளரிப் பழங்கள் பழுத்திருந்தன. ஒரு நரி ஒவ்வொரு நாளும் அங்கு வந்து அப்பழங்களைத் தின்றது.

**2. குடியானவர் நரியைக் கொல்ல என்ன செய்தார்?**

குடியானவர் அந்த நரியைக் கொல்லக் கருதினர். வெள்ளரிக் கொடிகளின் இடையில் மிகவும் கூர்மையான கத்தரிப்பொறிகளை மறைத்து வைத்தார்.

**3. நரி ஊளையிட்டுக்கொண்டு ஓடியது ஏன்?**

வழக்கம்போல் ஒரு நாள் நரி வந்தது. வெள்ளரிப் பழத்தைத் திருடித் தின்ன முயன்றது. அதன் வால் கத்தரிப்பொறியில் சிக்கி அறுந்துவிட்டது. வலிபொறுக்க முடியாமல் நரி ஊளையிட்டுக்கொண்டே காட்டிற்குள் ஓடியது. அதைக் கண்ட மற்ற நரிகள் ஏளனம் செய்தன.

**4. வாலை இழந்ததற்கு நரி கூறிய காரணம் என்ன?**

வாலை இழந்த நரி மற்ற நரிகளை நோக்கி, "நமது வாலில் மயிர் அடர்ந்திருக்கிறது. அந்த மயிருக்காக மக்கள் நம்மைக் கொல்கிருர்கள். வாலை அறுத்துக் கொண்டால் அச்சம் இன்றி வாழலாம். அதைக் கருதி என் வாலை நான் அறுத்துவிட்டேன். நீங்களும் இப்படிச் செய்தால் கவலையின்றி வாழலாம்," என்று கூறியது.

**5. கிழ நரி கூறியது யாது?**

வாலை அறுத்துக்கொண்ட நரி கூறியதைக் கேட்ட ஒரு கிழ நரி, "மக்கள் நம் வாலை மட்டுமா விரும்புகிருர்கள்; நம் இறைச்சிக்காகவும் நம்மைக் கொல்கிருர்கள். ஆகையால், நாம் நமது உடலையே அழித்துவிட வேண்டுமா?" என்று கூறி ஏளனம் செய்தது.

**6. பொருள் கூறு.**

பொரி - நெல் பொரி. பொறி - இயந்திரம். அருந்து - குடி. அறுந்து - அறுபட்டு, இடைவிட்டு. கூரியது -

கூர்மையானது. கூறியது - சொன்னது. அரியாமல் - வெட்டாமல். அறியாமல் - தெரியாமல்.

## 6. தாஜ்மஹால்

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| **பேரழகு** - மிகுந்த அழகு | **இறுதி** - கடைசி |
| **கட்டழகி** - மிகுந்த அழகி | **நலங்கள்** - நன்மைகள் |
| **பண்பு** - குணம் | **அயல்நாடு** - வெளி நாடு |
| **தறுவாயில்** - சமயத்தில் | **விளைக்கும்** - உண்டாகும் |

### வினா-விடை

**1. தாஜ்மஹால் எங்கு உள்ளது?**

தாஜ்மஹால் நம் நாட்டில், ஆக்ரா என்னும் இடத்தில் யமுனை ஆற்றங்கரையில் இருக்கிறது.

**2. அது கட்டப்பட்டதற்குக் காரணம் என்ன?**

முகலாய மன்னர் ஷாஜஹான் என்பவரின் மனைவி மும்தாஜ். அவள் கட்டழகி. மன்னர் தம் மனைவியுடன் ஒற்றுமையாய் வாழ்ந்தார். அவள் இறக்கும்போது, தன் உடலை அடக்கம் செய்யும் இடத்தில் ஓர் அழகிய கட்டடம் கட்டுவிக்கவேண்டும் என்று கணவனிடம் வேண்டினாள். அவள் விரும்பியபடியே ஷாஜஹான் தாஜ்மஹாலைக் கட்டு வித்தார்.

**3. இதுபற்றி வரலாற்று ஆசிரியர் கூறுவன யாவை?**

"தாஜ்மஹால் உலகில் பேரழகு வாய்ந்த கட்டடங் களுள் ஒன்று. இது சிறந்த பளிங்குக்கற்களால் கட்டப் பட்டது; இதைக் கட்ட இருபதினாயிரம் தொழிலாளர்கள் இருபத்திரண்டு ஆண்டுகள் வேலை செய்தார்கள். முப்பது லட்சம் ரூபாய் செலவாயிற்று," என்று வரலாற்று ஆசிரி யர் கூறுகின்றனர்.

**4. இச் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது:**

(பேரழகு, கட்டடம், கட்டழகி, தறுவாய்.

1. மும்தாஜ் பேரழகு வாய்ந்த பெண்மணி.
2. சென்னை உயர்நீதிமன்றம் பெரிய கட்டடம்.
3. என் தமக்கை நல்ல கட்டழகி.
4. கந்தன் இறங்கும் தறுவாயில் கால் இடறி விழுந்தான்.

# 7. நல்வாழ்வு

## அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| விதிகள் - நடக்க வேண்டிய முறைகள், சட்டங்கள் | பயக்கும் - உண்டாகும் |
| தூய்மை - சுத்தம் | பாண்டங்கள் - பாத்திரங்கள் |
| நீராடி - குளித்து | அருந்துவது - குடிப்பது |
| உலர்த்தி - காயவைத்து | செம்மை - ஒழுங்கு |
| கசக்கி - தோய்த்து | புத்துணர்ச்சி - புதியதெம்பு |
| புசித்தல் - உண்ணுதல் | அடாது - தகாது |
| மீண்டும் - மறுபடியும் | நற்பண்பு - நல்ல குணம் |
| உள்ளத்திற்கு - மனத்திற்கு | உரம் - வலிமை |
| | வளம் - செழுமை |

## வினா-விடை

**1. நல்வாழ்வு வாழ எப்படி நடக்கவேண்டும்?**

நம் உடலையும் உடையையும் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். வீட்டில் குப்பைகள் சேராமலும் சாக்கடையில் அழுக்கு நீர் தேங்காமலும் கவனித்துக் கொள்ளவேண்டும். பசி எடுத்தால்தான் உண்ணவேண்டும். தூய காற்று வீசும் இடங்களில் உலாவி வரவேண்டும். நீரைக் காய்ச்சி வடிகட்டி, குளிர்ந்த பிறகு அருந்த வேண்டும். சிறிது நேரம் காலையிலும் மாலையிலும் உடற் பயிற்சி செய்யவேண்டும். இரவில் குறித்த நேரத்தில் படுத்து உறங்கி, சூரியன் புறப்படுமுன் எழுதல் வேண்டும்.

**2. இந்தப் பாடத்தில் வந்துள்ள பழமொழி எது?**

"கூழானாலும் குளித்துக் குடி; கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்பதே பாடத்தில் உள்ள பழமொழி.

**3. உடற்பயிற்சியால் விளையும் நன்மைகள் யாவை?**

உடற்பயிற்சியால் இரத்த ஓட்டம் செம்மை அடையும். உடல் உறுப்புக்கள் வலிமை பெற்று அழகுடன் விளங்கும்.

**4. நாம் செய்யத் தகாதவை எவை?**

நாம் இரவில் நெடுநேரம் கண் விழிப்பது கூடாது. அளவுக்கு மிஞ்சி வருந்தி உழைப்பது கூடாது. சோம்பலாக இருப்பதும் கூடாது. நம் உள்ளத்தில் தீய எண்ணங்களுக்கு இடந்தரக் கூடாது.

**5. மனத்தைக் கெடுப்பவை எவை? உயர்த்துபவை எவை?**

வருத்தம், கோபம், பொருமை, பேராசை என்பவை மனத்தைக் கெடுப்பவை. கருணை, சுறுசுறுப்பு, அஞ்சாமை, பொறுமை, அன்பு ஆகிய நற்பண்புகள் மனத்தை உயர்த்துபவை?

**6. நம் வாழ்வு வளம்பெற என்ன செய்யவேண்டும்?**

நம் உள்ளமும் உடலும் உரம் பெறும்படி நடந்து கொண்டால், நம் வாழ்வு வளம் பெறும்.

**7. பொருள் எழுது:**

கரி - யானை, அடுப்புக்கரி. கறி - காய்கறி, இறைச்சிக் கறி போன்ற துணை உணவு. வலம்-வலப்புறம், சுற்று. வளம் - செழுமை. மனம் - உள்ளம். மணம்- வாசனை.

# 8. அன்னை மொழி

## பயிற்சி

**இந்தக் கதையை உன் சொந்தச் சொற்களால் எழுது:**

ஒரு குருவி ஒரு மரத்தில் கூடு கட்டி மூன்று குஞ்சுகளை வளர்த்து வந்தது; நீண்ட தூரம் சென்று இரை தேடி வந்து குஞ்சுகளுக்குக் கொடுத்தது. பறக்கப் பழகும்படி குஞ்சுகளுக்குக் கூறியது. இரண்டு குஞ்சுகள் தாயுடன் பறந்து சென்றன. ஒரு குஞ்சு மட்டும் சோம்பலாகக் கூட்டிலேயே இருந்தது. ஒருவன் வந்து மரத்தில் ஏறினான்; கூட்டை அடைந்தான். சிறகு இருந்தும் பறக்கத் தெரியாதபடியால் அந்தக் குஞ்சு தவித்தது. வந்தவன் அந்தக் குஞ்சைப் பிடித்துத் தன் வீட்டிற்குக் கொண்டு போய் ஒரு கூட்டில் அடைத்தான். தன் தாய் பறக்கக் கற்றுக்கொள்ளும்படி கூறிய சொற்கள் அப்போது அதன் நினைவுக்கு வந்தன.

## இலக்கணம்

இந்தப் பாட்டிலிருந்து மூன்று பொருட் பெயர்களை எடுத்து எழுது:

குருவி, குஞ்சு, இறைவன்.

# 9. பேராசையின் விளைவு

## அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| மன்றாடினான் - மீண்டும் மீண்டும் வேண்டிக் கொண்டான் | அந்தோ - ஐயோ |
| புத்தி புகட்ட - அறிவு கற்பிக்க | அரற்றி - புலம்பி |
| பூரித்தான் - மகிழ்ந்தான் | அறியாமை - அறிவில்லாமை |
| செருக்கு - கர்வம் | பிழை - தவறு |
| அமர்ந்தான் - உட்கார்ந்தான் | உவந்து - மகிழ்ந்து |
| ஆவலோடு - ஆசையோடு | பகர்ந்து - சொல்லி |
| கதறினான் - அழுதான் | மனநிறைவோடு - திருப்தியோடு. |

## வினா-விடை

**1. மைதாஸ் என்பவன் யார்?**

மைதாஸ் என்பவன் பேராசை பிடித்தவன். அவனிடம் ஏராளமான பொருள் இருந்தது ; ஆனால், போதும் என்னும் மனம் இல்லை.

**2. மைதாஸ் தெய்வத்தினிடம் கேட்ட வரம் யாது?**

தான் தொட்டவை எல்லாம் பொன் ஆகும் வரம் தர வேண்டும் என்று மைதாஸ் தெய்வத்தினிடம் கேட்டான்.

**3. தெய்வம் என்ன செய்தது?**

தெய்வம் அவனுக்குப் புத்தி புகட்டக் கருதியது ; ஒரு நாள் அவன் கனவில் தோன்றியது; "இனி நீ தொட்டதெல்லாம் பொன்னாகும்," என்று கூறிவிட்டு மறைந்தது.

**4. தெய்வம் தந்த வரத்தால் என்ன விளைந்தது?**

தெய்வம் தந்த வரத்தால் மைதாஸ் தொட்ட பொருள் எல்லாம் பொன்னாக மாறியது. மைதாஸ், தெய்வம் தனக்குக் கருணை காட்டியதாக எண்ணினான். உலகில் தன்னைவிடச் செல்வர் எவரும் இல்லை எனக் கர்வம் கொண்டான். பிறகு, வாய் கொப்பளிக்கத் தண்ணீரை எடுத்தான். அது பொன்னாயிற்று. சிற்றுண்டியைத் தொட்டான். அது பொன்னாயிற்று. தன் மகளை அன்போடு தொட்டான். அவள் பொன்சிலை ஆனாள். இந்த நிலை கண்ட மைதாஸ் மனம் பதறி அழுதான்.

**5. மைதாஸ் பிறகு என்ன செய்தான்?**

வரத்தினால் ஏற்பட்ட விளைவுகளைக் கண்ட மைதாஸ், "தெய்வமே, நான் என் அறியாமையால் செய்த பிழை

யைப் பொறுத்து அருள்க! இந்தப் பாழான பொன் எனக்கு வேண்டா,'' என்று வேண்டினான்.

**6. பின் தெய்வம் என்ன செய்தது?**

தெய்வம் மைதாஸ் முன் தோன்றியது. "பேராசை பெரு நஷ்டம் என்பதை நீ கேட்டதில்லையா? போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து என்பதை அறிந்துகொள். இனி எல்லாம் பழைய நிலையை அடையும்,'' என்று சொல்லி மறைந்தது.

**7. இக் கதையை மைதாஸ் சொல்வதுபோல எழுது:**

என் பெயர் மைதாஸ். என்னிடம் ஏராளமான பொருள் இருந்தது. ஆனால், போதும் என்னும் மனம் இல்லை. ஆகையால், நான் தொட்டவை எல்லாம் பொன் ஆகவேண்டும் என்று தெய்வத்தினிடம் வேண்டினேன். தெய்வம் என் கனவில் தோன்றி வரம் கொடுத்தது.

மறுநாள் காலை மகிழ்ச்சியுடன் எழுந்தேன். படுக்கை பொன்னாகி இருந்தது. பக்கத்திலிருந்த பொருள்களை யெல்லாம் ஒவ்வொன்றாகத் தொட்டேன். அவை பொன் னாயின. நான் மகிழ்ந்தேன். என்னைவிடச் செல்வர் உலகில் எவரும் இல்லை என்று கர்வம் கொண்டேன்.

பிறகு வாய் கொப்பளிக்கத் தண்ணீரை எடுத்தேன். அது பொன்னாயிற்று. உண்பதற்குச் சிற்றுண்டிகளை எடுத்தேன். அவை பொன்னாக மாறின.

அன்போடு என் மகளைத் தொட்டேன். அவள் பொன் சிலையானாள். மனம் பதறி அழுதேன். என் பிழை யைப் பொறுத்து அருளும்படி தெய்வத்தினிடம் வேண்டி னேன். தெய்வம் என்முன் தோன்றியது. "பேராசை பெரு நஷ்டம் என்பதை நீ கேட்டதில்லையா? போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து. இனி எல்லாம் பழைய நிலையை அடையும்,'' என்று சொல்லி மறைந்தது. எல்லாம் முன்போல ஆயின. என் மகளும் உயிர் பெற்றாள். இப்போது நான் மன நிறைவோடு வாழ் கிறேன்.

**8. பொருள் எழுது:**

இரக்கம் - கருணை காட்டுவது. இறக்கம் - கீழே இறங்குவது.

**9. எதிர்ச் சொற்களை எழுது:**

சிறிது × பெரிது. உடையவர் × இல்லாதவர்.

சிற்றுண்டி × பேருண்டி. நஷ்டம் × இலாபம்.
நிறைவு × குறைவு.

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உள்ள இடப்பெயர்களின் கீழ்க் கோடு இடு :

1. மாணிக்கவாசகர் பிறந்த இடம் வாதவூர்.
2. மதுரை பாண்டிய நாட்டின் தலைநகரம்.
3. என் வீடு பள்ளிக்கு அருகில் உள்ளது.
4. மழை பெய்தால் ஏரி, குளம், குட்டைகளில் நீர் நிரம்பும்.

## 10. வண்ண மயில்

### அருஞ்சொற்பொருள்

வண்ணம் - அழகு, நிறம்
பண்டை - பழைய
வியந்தனர் - ஆச்சரியப் பட்டனர்
தூவி - மெல்லிய இறகு
அமைப்பர் - செய்வர்
தேசீயப் பறவை - நாட்டுப் பறவை

### வினா-விடை

**1. மயில் அயல் நாட்டுக்குப் போனது எப்படி ?**

இது அழகிய பறவை. காட்டிலும் கோவில்களிலும் இது இருக்கும். இது நம் நாட்டுப் பறவை. பழங்காலத்தில் நம் நாட்டுக்கு வந்த அயல்நாட்டு வணிகர் இதன் அழகைக் கண்டு தம் நாடுகளுக்குக் கொண்டு போயினர்.

**2. மயிலின் உருவ அமைப்பு யாது ?**

மயிலின் உடல் பருத்து இருக்கும். கழுத்து நீண்டு இருக்கும். கழுத்தில் அழகிய நிறங்களுடைய பளபளப்பான மெல்லிய தூவிகள் இருக்கும்.

**3. ஆண் மயிலுக்கும் பெண் மயிலுக்கும் உள்ள வேறுபாடு யாது ?**

ஆண் மயிலுக்கு நீண்ட தோகை உண்டு. தலையில் நீண்ட கொண்டையும் உண்டு. தோகையில் பல நிறம் பொருந்திய கண்போன்ற உருவங்கள் காணப்படுகின்றன. பெண் மயிலுக்குத் தோகையும் கொண்டையும் இல்லை. இவையே இரண்டுக்கும் உள்ள வேறுபாடு.

**4. மயில் எப்பொழுது தோகை விரித்து ஆடும் ?**

ஆண்மயில், மேகத்தைக் கண்டால், தன் தோகையை விரித்து ஆடும். அப்பொழுது தோகை ஒரு பெரிய விசிறியைப் போலத் தோன்றும். தோகையே மயிலுக்குப் பேரழகை உண்டாக்குவது.

**5. மயிலின் தோகை எவற்றுக்குப் பயன்படும் ?**

மயிலின் தோகையால் பல அழகிய பொருள்களும், அழகிய விசிறிகளும் செய்யப்படுகின்றன.

**6. மயில் முழுவளர்ச்சி பெற எவ்வளவு நாள் ஆகும் ?**

பெண் மயில் ஓர் ஆண்டில் ஐந்து முட்டைகள் இடும்; அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும். மயிற்குஞ்சு முழு வளர்ச்சியடைய இரண்டு ஆண்டுகள் ஆகும்.

**7. மயில் எதற்குப் பகை ?**

மயில் பாம்புக்குப் பகை. அது பாம்பைக் கண்டால் தன் கூரிய அலகால் கொத்திக் கொன்றுவிடும்.

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உள்ள காலப் பெயர்களைக் குறிப்பிடு :

1. நான் பிறந்த **நாள் வெள்ளிக்கிழமை.**
2. **தையும் மாசியும்** குளிர் **காலம்.**
3. மயில் ஓர் **ஆண்டில்** ஐந்து முட்டைகள் இடும்.
4. **இரவும் பகலும்** சேர்ந்தது ஒரு **நாள்.**

## 11. பொய்த் துறவியும் போலிச் சீடனும்

### அருஞ்சொற்பொருள்

**துறவி** - காவித்துணி உடுத்திய பண்டாரம்

**சீடன்** - மாணுக்கன்

**போலிச் சீடன்** - மாணுக்கன் போல நடிப்பவன்

**கவர்ந்துகொண்டு** - திருடிக் கொண்டு

**அணுகி** - நெருங்கி

**திக்கற்றவன்** - ஆதரிப்பவர் இல்லாதவன்

**தக்க தருணம்** - தகுந்தநேரம்

**புடைக்க** - பெருக்க

**அன்னம்** - சோறு

**கன்னம்** - களவு

**ஏய்த்தான்** - ஏமாற்றினுன்

**புலம்பினுன்** - அழுதான்

## வினா—விடை

**1. தேவசன்மா என்ன செய்து வந்தான்?**

தேவசன்மா என்பவன் துறவிபோல நடித்து வந்தான். அவன் வீடுதோறும் பிச்சை எடுத்துப் பொருள் சேர்த்து வந்தான். சேர்த்த பொருளைத் தன் போர்வையில் வைத்துத் தைத்துப் போர்த்துக் கொண்டான்.

**2. ஆஷாடபூதி என்ன செய்ய எண்ணினான்?**

ஆஷாடபூதி என்பவன் ஒரு குறும்புக்காரச் சிறுவன். அவன் தேவசன்மாவின் சூதைத் தெரிந்துகொண்டான். அவன் தேவசன்மாவின் போர்வையை எப்படியாவது கவர்ந்து கொண்டு ஓடிவிட எண்ணினான்.

**3. ஆஷாடபூதி தேவசன்மாவை ஏமாற்ற என்ன செய்தான்?**

ஆஷாடபூதி தேவசன்மா கால்களில் விழுந்து வணங்கினான். "நான் திக்கற்றவன். இவ்வுலகில் எப்படி வாழ்வேன்? நீங்களே என்னைக் காப்பாற்றவேண்டும்," என்று கூறி அழுதான். அவன் வஞ்சகத்தை அறியாத தேவசன்மா அவனைத் தன் சீடனாக ஏற்றான். ஆஷாடபூதி தேவசன்மாவின் போர்வையைக் கவரத் தகுந்த சமயத்தை எதிர்பார்த்து இருந்தான்.

ஒருநாள் இருவரும் ஒருவர் வீட்டில் சாப்பிட்டுவிட்டு வழி நடந்தனர். வழியில் ஆஷாடபூதி ஒரு துரும்பை எடுத்துத் தன் தலையில் வைத்துக்கொண்டான். அதைத் தேவசன்மாவுக்குக் காட்டி, "சோறு அளித்தவர் வீட்டுத் துரும்பு என் தலையில் ஒட்டிக்கொண்டு வந்துவிட்டதே! நான் ஓடிப்போய் இதை அந்த வீட்டில் போட்டுவிட்டு வருகிறேன்," என்று சொல்லி ஓடினான். பின் இரைக்க இரைக்க ஓடிவந்தான். பாவத்திலிருந்து தப்பியதாகச் சொல்லி, தேவசன்மாவின் காலில் விழுந்தான். தேவசன்மா அவனை முற்றிலும் நம்பிவிட்டான். சிறிது தூரம் சென்ற பிறகு, தேவசன்மா தன் போர்வையைச் சீடனிடம் கொடுத்துவிட்டு நீர் குடிக்கச் சென்றான். உடனே ஆஷாடபூதி காற்றாய்ப் பறந்து மறைந்தான்.

**4. தேவசன்மா என்ன சொல்லிப் புலம்பினான்?**

நீர் குடித்துவிட்டுத் திரும்பி வந்து சீடனைக் காணாத தேவசன்மா, "ஐயோ! ஆஷாடபூதி நம்மை ஏய்த்தானே! நாம் மோசம் போனோமே! ஒருவருக்கும் தெரியாமல்

சேர்த்துவைத்த பொருளை இழந்தோமே!" என்று சொல்லி அழுதான்.

**5. இருபொருள் எழுது:**

திக்கு - திசை, தொற்றித் தொற்றிப் பேசுதல். அன்னம் - சோறு, அன்னப்பறவை. கன்னம் - தாடை, களவாடச் சுவரைத் துளைத்தல். புடைக்க - அடிக்க, வயிறு பருக்க.

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உள்ள சினைப் பெயர்களை எடுத்து எழுது:

1. ஆண் மயிலுக்குத் தோகையும், நீண்ட கொண்டையும் உண்டு.
2. மரத்தின் கிளையில் இலையும் பூவும் காயும் உண்டு.

தோகை, கொண்டை, கிளை, இலை, பூ, காய்—சினைப் பெயர்கள்.

## 12. அறியாமைக்கு அபராதம்

### அருஞ்சொற்பொருள்

**பொதிகள் - மூட்டைகள்**
**கறித்தன - கடித்தன**
**அலங்கரிக்க - அழகு செய்ய**
**அணி - நகை**
**இழப்பை - நஷ்டத்தை**
**ஈடுசெய்ய - சரிப்படுத்திக் கொடுக்க**
**ஏனைய - மற்ற**
**வாதி - வழக்குத் தொடுப்பவர்**
**பிரதிவாதி - வழக்கை எதிர்ப்பவர்**
**இசைந்தார்கள் - சம்மதித்தார்கள்**
**திறம் - திறமை.**

### வினா-விடை

**1. வணிகர்கள் பூனையை வளர்த்தது ஏன்?**

வணிகர் நால்வர் பஞ்சுப் பொதிகளை வாங்கி ஒரு வீட்டில் அடுக்கி வைத்தார்கள். எலிகள் அந்தப் பஞ்சுப் பொதிகளைக் கறித்தன. அதனால் அவர்கள் எலிகளை விரட்ட ஒரு பூனையை வளர்த்தார்கள்.

**2. பூனைக்காலுக்கு எண்ணெய்ச்சீலை ஏன் கட்டப் பட்டது?**

வணிகர் நால்வரும் தனித்தனியே பூனையின் ஒவ்வொரு காலுக்கும் ஒவ்வொரு தண்டை அணிந்து அழகு

செய்தனர். ஒரு நாள் பூனையின் ஒரு காலில் காயம் பட்டது. அந்தக் காலுக்குத் தண்டை அணிந்தவர் அதை நீக்கிவிட்டு, எண்ணெய்ச் சீலையால் அந்தக் காலுக்குக் கட்டுக் கட்டி வைத்தார்.

**3. எண்ணெய்ச் சீலையில் ஏன் தீப்பிடித்தது?**

பூனை அடுப்பின் அருகே சென்றது. அதன் காலில் இருந்த எண்ணெய்ச் சீலையில் தீப்பிடித்தது.

**4. தீப்பற்றியதால் ஏற்பட்ட விளைவு யாது?**

பூனை, சூட்டின் வலி பொறுக்க முடியாமல், பஞ்சுப் பொதியின் மேல் தாவி இங்கும் அங்கும் கத்திக் கொண்டே ஓடியது. அதனால் பஞ்சுப் பொதிகள் தீப் பிடித்து எரிந்தன.

**5. வாதிகள் தொடுத்த வழக்கு யாது?**

"பூனையின் காலில் பிரதிவாதி சுற்றியிருந்த எண் ணெய்ச் சீலையில் தீப்பிடித்ததே பஞ்சுப் பொதிகள் அழிந்ததற்குக் காரணம். ஆகையால் எங்களுக்கு ஏற் பட்ட இழப்புக்குப் பிரதிவாதியே ஈடுசெய்ய வேண்டும்," என்று நீதிமன்றத்தில் வாதிகள் வழக்குத் தொடுத்தனர்.

**6. நீதிமன்றத் தலைவர் கூறிய தீர்ப்பு யாது?**

நீதிமன்றத் தலைவராகிய மரியாதை ராமர் வழக்கை விசாரித்தார். "காயம்பட்ட காலால் பூனை ஓடமுடியாது. மற்ற மூன்று கால்களே பஞ்சுப் பொதிகளின் மேல் பூனை தாவி ஓடப் பயன்பட்டன. அதனால் அந்தக் கால்களுக்கு உரியவர்களே பிரதிவாதிக்குச் சேரவேண்டிய தொகை யைச் செலுத்திவிட வேண்டும். செலுத்தாவிட்டால் ஆறு மாதக் கடுந்தண்டனை ஏற்றுச் சிறையில் இருக்க வேண்டும்," என்று தீர்ப்புக் கூறினர்.

**7. வாதிகள் என்ன செய்தார்கள்?**

தீர்ப்பைக் கேட்டுத் திடுக்கிட்ட வாதிகள், தங்கள் அறியாமைக்கு விதிக்கப்பட்ட அந்த அபராதத்தை ஒரு வாரத்திற்குள் செலுத்திவிட இசைந்தார்கள்.

## இலக்கணம்

இந்தப் பாடத்தில் உள்ள பண்புப் பெயர்களை எடுத்து எழுது:

அழகு, வலி, திறம், அறியாமை, காயம்.

# 13. வாழும் வகை

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| கிட்டினேம் - பெற்றேம் | ஊர்கள் தோறும் - ஒவ்வோர் ஊரிலும் |
| மீட்டு - விடுதலைபெறச் செய்து | அரசை - ஆட்சியை |
| மோதினும் - தாக்கினுலும் | |

### வினு-விடை

**நாம் வாழும் வகையை உன் சொந்தச் சொற்களால் விளக்கு :**

நாம் அடிமை வாழ்மை விட்டு உரிமை வாழ்வைப் பெற்றிருக்கிறேம். நாம் கடமையை உணர்ந்து நம் நாட்டு எல்லையைக் காக்கவேண்டும். நம் நாட்டின்மீது படையெடுப்பவரையும், நம்மைப் பயமுறுத்துபவரையும் நடுநடுங்கச் செய்வோம். நாட்டை மீட்போம். நாம் ஏழைகளாக இருந்தாலும், நமக்கு என்ன துன்பம் வந்தாலும், பயங்காளிகளாக வாழமாட்டோம். கெட்டவர்களுக்குப் பணியமாட்டோம். ஊர் ஊராகச் சென்று ஒற்றுமைக்குப் பாடுபடுவோம். நம் நாட்டின் சிறப்பை அழிக்க நினைப்பவரின் மனம் நோகும்படி செய்வோம். வேற்று நாட்டவருக்கு இடங்கொடுக்க மாட்டோம். நம் ஆட்சியை இனி எவரிடமும் விட்டுவிடமாட்டோம். நாமே நம் நாட்டின் மன்னராகி ஆளுவோம்.

### இலக்கணம்

இந்தப் பாட்டுகளில் உள்ள பண்புப் பெயர்களை எழுது :

அடிமை, ஆண்மை, கடமை, ஏழை, துன்பம், கோழை, கொடியவர், ஒற்றுமை, சீர்.

# 14. குரங்கும் முதலையும்

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| நாவற்கனி - நாவற்பழம் | அடம் - பிடிவாதம் |
| தீங்கனி - இனிய பழம் | வினவிற்று - கேட்டது |
| கிட்டின - கிடைத்தன | விழைகின்றுள் - விரும்புகின்றுள் |
| நித்தம் - தினந்தோறும் | உரையாடல் - பேச்சு |
| கெடுமதி - கெட்ட புத்தி | உலர - காய |
| நேரும் - உண்டாகும் | |

## வினா-விடை

**1. குரங்கு எங்குக் குடியிருந்தது?**

குரங்கு கங்கை ஆற்றங்கரையில் ஒரு நாவல் மரத்தில் குடியிருந்தது.

**2. முதலை எதில் வாழ்ந்தது?**

முதலை கங்கை ஆற்று நீரில் வாழ்ந்தது.

**3. குரங்கு முதலைக்கு எவற்றைக் கொடுத்து வந்தது?**

குரங்கும் முதலையும் நட்பாய் இருந்தன. குரங்கு தினந்தோறும் அந்த முதலைக்கு நாவற் பழங்களைக் கொடுத்து வந்தது.

**4. பெண் முதலை என்ன கூறியது?**

ஒருநாள் முதலை சில நாவற் பழங்களைக் கொண்டு போய்ப் பெண் முதலைக்குக் கொடுத்தது. அவற்றைத் தின்ற பெண் முதலை, "இந்த இனிய பழங்களை நித்தம் தின்பவன் ஈரல் மிகவும் இனிப்பாய் இருக்கும். அவன் ஈரலை எப்படியாவது கொண்டுவந்து கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் இறப்பேன்," என்று கூறியது.

**5. பெண்முதலைக்கு ஆண்முதலை என்ன சொல்லிற்று?**

"பெண்ணே இப்பழங்களைத் தின்னும் குரங்கு என் நண்பன். எனக்கு நன்மை செய்பவன். நான் உனக்காக அவனைக் கொல்வது பாவம் அல்லவா? இந்தக் கெடுமதி உனக்கு ஆகாது," என்று ஆண் முதலை பெண் முதலையிடம் கூறியது.

**6. பெண் முதலை எதற்காக அடம் பிடித்தது?**

"நான் உன் மனைவி. வாழ்வில் இன்பத்திலும் துன்பத்திலும் உனக்குத் துணையாய் இருப்பவள். என்னைவிட உன் நண்பன் உனக்கு வேண்டியவனாய் இருந்தால் நீ அவனுடன் வாழலாம். நான் இறக்கிறேன்," என்று பெண் முதலை கூறி, தனக்குக் குரங்கின் ஈரலே வேண்டும் என்று அடம் பிடித்தது.

**7. பிறகு ஆண் முதலை என்ன செய்தது?**

தன் மனைவியின் விருப்பம்போல் செய்வதாக ஆண் முதலை கூறியது. பிறகு அது குரங்கிடம் சென்று சோர்ந்த முகத்துடன் இருந்தது. அதைப் பார்த்த குரங்கு சோர்வுக்குக் காரணம் கேட்டது. "நீ கொடுத்த

நாவற்பழங்களை என் மனைவிக்குக் கொடுத்தேன். அவள் தின்று மகிழ்ந்து உனக்கு விருந்து அளிக்க ஆசைப்படுகிருள். நீ தடை கூருமல் வரவேண்டும்,'' என்று வேண்டியது.

**8. குரங்கு ஆண் முதலையை எப்படி ஏமாற்றியது?**

ஆண் முதலையின் வேண்டுதலுக்கு இணங்கி, குரங்கு முதலையின் முதுகில் அமர்ந்தது. முதலை நீரில் நீந்திச் சென்றது. ஆற்றின் நடுவில் போகும்போது ஆண்முதலை தன் மனைவியின் எண்ணத்தைக் குரங்கிடம் கூறியது. உடனே குரங்கு தன் ஈரலை மரக் கிளையில் உலர வைத்திருப்பதாகவும் திரும்பி மரத்திடம் சென்ருல் அதைக் கொண்டு வருவதாகவும் கூறியது. முதலை அப்படியே செய்தது. குரங்கு கரையில் குதித்து மரத்தில் ஏறி, "மூடா, ஈரல் உடம்பை விட்டிருக்குமா? சீ ஓடிப்போ! இனி என் முகத்திலே விழியாதே!'' என்று கூறியது. முதலை வருத்தத்துடன் திரும்பியது.

### இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் உள்ள தொழிற்பெயர்களை எடுத்து எழுது:

1. ஓதுவது ஒழியேல்.
2. சாலையில் போக்குவரவு மிகுதியாய் உள்ளன.
3. பகலில் உறங்குதல் கெடுதி செய்யும்.
4. நண்பன் வருகை மகிழ்ச்சி அளித்தது.
5. உடற்பயிற்சி செய்தல் உடம்புக்கு நல்லது.

(1) ஓதுவது. (2) போக்குவரவு (3) உறங்குதல், கெடுதி. (4) வருகை, மகிழ்ச்சி. (5) பயிற்சி, செய்தல்.

## 15. கடவுளின் கருணை

### அருஞ்சொற்பொருள்

தட்டாமல் - தடையில்லாமல்
நல்லானுகவே - நல்லவனுகவே
இருதலைக்கொள்ளி - இரண்டு முனைகளிலும் நெருப்பு உள்ள கொள்ளிக் கட்டை
திருவருள் - கருணை
கடும்போர் - பெரிய சண்டை
மல்லாடியது - போரிட்டது
எல்லையில்லாத - அளவு இல்லாத
இறைவன் - கடவுள்

## வினு-விடை

**1. நல்லான் குணங்களைக் கூறு :**

ஏழையாகிய நல்லான் கடவுளிடம் அன்பு உடையவன். தன்னுல் செய்ய முடிந்த உதவியை எவருக்கும் தட்டாமல் செய்வான். மறந்தும் பொய் பேசாதவன். நல்லான் எவர்க்கும் நல்லவனுகவே வாழ்ந்தான்.

**2. நல்லானுக்கு ஏற்பட்ட இடையூறு யாது?**

ஒரு நாள் நல்லான் வயல் வேலை முடிந்ததும், ஒரு மடுவின் கரை வழியே வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான். தனக்கு எதிரே ஒரு புலி வருவதைக் கண்டான். மடுவில் குதித்துச் சிறிது நேரம் மறைந்திருக்கலாம் என்று நல்லான் எண்ணித் திரும்பினுன். மடுவில் ஒரு முதலை இருந்தது. அதைக் கண்ட நல்லான் நடுங்கினுன்.

**3. புலியையும் முதலையையும் பார்த்த நல்லான் என்ன செய்தான்?**

எதிரே புலியையும் மடுவில் முதலையையும் கண்ட நல்லான் நடுங்கி, "ஐயோ! கடவுளே, என் நிலைமை இருதலைக் கொள்ளி எறும்பின் நிலைமை ஆயிற்றே! கடவுளே நீதான் என்னைக் காப்பாற்றவேண்டும்," என்று எண்ணி, மூர்ச்சை அடைந்து தரையில் விழுந்தான்.

**4. புலி எப்படி முதலையிடம் சிக்கியது?**

புலி நல்லானைக் கொல்லப் பாய்ந்தது. அது வேக மாகப் பாய்ந்ததால், குறி தவறி மடுவில் விழுந்தது. உடனே முதலை அதைப் பிடித்துக் கொண்டது.

**5. முதலையும் புலியும் எப்படிப் போராடி இறந்தன?**

முதலைக்கும் புலிக்கும் கடும்போர் நடந்தது. முதலை புலியை நீருக்குள் இழுக்க முயன்றது. புலி முதலையைக் கரைமேல் இழுக்க மல்லாடியது. இரண்டும் ஒன்றை ஒன்று கடித்து மாண்டன.

**6. நல்லான் கடவுளுக்கு ஏன் நன்றி செலுத்தினுன்?**

நல்லான் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்; இறந்த புலியையும் முதலையையும் கண்டான்; எல்லையில்லாத மகிழ்ச்சி அடைந்தான். இவ்வளவு பெரிய ஆபத்தி லிருந்து தன்னைக் காப்பாற்றிய கடவுளைத் தன் இரு கரங் களையும் குவித்து, "எல்லாம் வல்ல இறைவனே, உனது திருவருளே என்னைக் காப்பாற்றியது. உனது அருளைப்

பெற்றவர் எதற்கும் அஞ்சவேண்டுவதே இல்லை,'' என்று கூறி வணங்கிவிட்டு, வீடு போய்ச் சேர்ந்தான்.

7. எதிர்ச் சொற்களை எழுதுக:

ஏழை × பணக்காரன் நல்லான் × பொல்லான்
வேகமாய் × மந்தமாய் குவித்து × விரித்து

### இலக்கணம்

இப்பாடத்தில் வந்துள்ள உயர்திணைப் பெயர்களையும், அஃறிணைப் பெயர்களையும் தனித் தனியாக எழுது:

| உயர்திணைப் பெயர்கள் | அஃறிணைப் பெயர்கள் |
|---|---|
| நல்லான், குடியானவன், ஒருவன், அவன், கடவுள், இறைவன், பெரியோர். | ஊர், நாள், வயல், வேலை, வீடு, மடு, கரை, வழி, புலி, முதலை, கொள்ளி, எறும்பு, கரங்கள். |

## 16. நட்பால் விளைந்த நன்மை

### அருஞ்சொற்பொருள்

இரை - தீனி
கூரிய - கூர்மையான
மந்தமாக - மெல்ல
கழி – கொம்பு
கரைந்து - கூவி
விடுவிக்க - விடுதலை செய்ய
உபாயம் - தந்திரம்
இசைந்தன - சம்மதித்தன
குட்டை - சிறிய குளம்
விடுபட்டு - விடுதலை அடைந்து.

### வினா-விடை

1. காக்கையும் எலியும் ஆமையும் ஏன் கவலை அடைந்தன?

ஒரு காட்டில் ஒரு மானும் ஓர் எலியும் ஓர் ஆமையும் ஒரு காகமும் நட்பாய் இருந்தன. ஒரு நாள் மேயச் சென்ற மான் மாலையில் திரும்பி வரவில்லை. அதனால் காக்கையும் எலியும் ஆமையும் கவலை அடைந்தன. அவை அன்று இரவு இரை கொள்ளவும் இல்லை.

**2. மேயச் சென்ற மான் ஏன் திரும்பி வரவில்லை ?**

மேயச் சென்ற மான் ஒரு வேடன் கட்டிய வலையில் சிக்கிக்கொண்டது. அதனால் அது மாலையில் திரும்பி வரவில்லை.

**3. காகம் எங்கு மானைக் கண்டது ?**

மறுநாள் பொழுது விடிந்தபின், அதைத் தேடிச் சென்ற காகம், வேடன் வலையில் மான் சிக்கியிருப்பதைக் கண்டது.

**4. ஆமை எதனால் வேடனிடம் சிக்கியது ?**

வேடன் வலையில் சிக்கிய மானைக் கண்ட காகம் உடனே திரும்பி வந்து எலியையும் ஆமையையும் மான் இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றது. எலி வலையைத் தன் பற்களால் கடித்தது; அப்போது வேடன் வருவதைக் கண்டது; உடனே ஓடி எதிரில் இருந்த புதரில் மறைந்தது. மான் வலையிலிருந்து விடுபட்டு ஓடியது. காகம் பறந்து சென்று ஒரு மரக்கிளையில் அமர்ந்தது. ஆமை தன் வழக்கப்படி மந்தமாக நடந்தபடியால் வேடன், ஆமையைப் பிடித்துத் தன் கழியின் நுனியில் கட்டி எடுத்துக்கொண்டு நடந்தான்.

**5. காகம் ஆமையை விடுவிக்க என்ன உபாயம் சொல்லிற்று ?**

மான் விரைந்து ஓடி, வேடன் வரும் வழியில் படுத்து, இறந்துவிட்டதைப் போலப் பாசாங்கு செய்யவேண்டும். காகம் அதன்மேல் உட்கார்ந்து கண்ணைக் குத்துவது போல நடிக்கவேண்டும். வேடன் கழியைக் கீழே வைத்து விட்டு மானைத் தூக்கிச் செல்ல வருவான். உடனே எலி கழியின் கட்டை அறுத்து, ஆமையை விடுவிக்க வேண்டும். வேடன் அருகில் வந்ததும் காகம் கரையும். மான் எழுந்து ஓடித் தப்பிவிடவேண்டும் என்று காகம் உபாயம் சொல்லியது.

**6. மான் எப்படித் தப்பிப் பிழைத்தது ?**

காகம் சொல்லிய உபாயத்திற்கு மானும் எலியும் இசைந்தன. வேடன் வரும் வழியில் மான் செத்தது போலக் கிடந்தது. வேடன் கழியைத் தரையில் வைத்து விட்டு மானை எடுக்க வந்தான். எலி உடனே ஓடி ஆமையைக் கட்டியிருந்த கயிற்றைக் கடித்து அறுத்தது. ஆமை பக்கத்திலிருந்த குட்டையில் இறங்கி மறைந்தது. காகம்

கரைந்தது. மான் எழுந்து ஓடித் தப்பியது. எலி புதரில் நுழைந்தது. காகம் பறந்தது. எல்லாம் தப்பிவிட்டன.

**7. வேடன் என்ன ஆனன் ?**

வேடன் ஏமாற்றம் அடைந்தான். "மான் என்னை ஏமாற்றிவிட்டது. என்னிடம் அகப்பட்ட ஆமையையும் இழந்தேன்," என்று எண்ணிக்கொண்டே வீட்டை நோக்கி நடந்தான்.

## 17. கைத்தொழில்கள்

### பயிற்சி

**பாரதியார் பாட்டில் குறித்துள்ள தொழில்களின் பெயர்களை வரிசையாக எழுது:**

இரும்பைக் காய்ச்சி உருக்கும் தொழில், இயந்திரம் செய்தல், வெல்லம் செய்தல், கடலில் மூழ்கி முத்து எடுத்தல், மண்பாண்டத் தொழில், வீடு கட்டும் தொழில், பழத் தோட்டம் அமைத்தல், பயிர்த்தொழில், எண்ணெய் எடுத்தல், நூல்நூற்றல், நெய்தல் போன்ற ஆயிரம் தொழில் செய்யும்படி பாரதியார் கூறுகிருர்.

## 18. நடுவுநிலைமைக்குப் பரிசு

### அருஞ்சொற்பொருள்

**உழவர்** - பயிர்த் தொழில் செய்பவர்

**சிக்கனத்துடன்** - செலவு அதிகம் செய்யாமல்

**எஞ்சியிருந்தவை** - மிச்சம் இருந்தவை

**உரியவை** – சொந்தமானவை

**கொழு** - கலப்பையின் நுனியிலிருக்கும் கார்

**அகழ்ந்து** - தோண்டி

**ஒப்பாகும்** - சமமாகும்

**அன்பளிப்பு** - பரிசு

**ஏற்றுக்கொண்டு** - ஒப்புக்கொண்டு

### விஞ–விடை

**1. பொன்னப்பரின் குணங்களை விளக்கு:**

பொன்னப்பர் சிக்கனமாக வாழ்ந்து பொருள் சேர்த்தார். அவர் வஞ்சனை அறியாத நெஞ்சம் உடையவர்; நடுவுநிலைமை தவருத நல்லவர்.

**2. சென்னியப்பர் எதனுல் ஏழையானுர்?**

சென்னியப்பர் செல்வத்தை வளர்ப்பதில் அக்கறை இல்லாதவர். அவர் தம் வருவாயில் சிறிதும் மிச்சம் வையாமல் செலவு செய்து ஏழையானுர்.

**3. சென்னியப்பர் என்ன எழுதிக் கொடுத்தார்?**

சென்னியப்பருக்கு ஒரு காணி நிலமும் ஒரு கூரை வீடுமே எஞ்சியிருந்தன. அவர் அந்த நிலத்தையும் பொன்னப்பருக்கு விற்றுவிட்டார். அந்த விற்பனைப் பத்திரத்தில், "இதிற்கண்ட நிலமும் அது அளிக்கும் பயனும் இன்று முதல் பொன்னப்பருக்கே உரியவை. இனி எனக்கு அந்த நிலத்தில் எவ்வித உரிமையும் இல்லை," என்று சென்னியப்பர் எழுதிக் கொடுத்தார்.

**4. பொன்னப்பருக்கு எப்படிப் புதையல் கிட்டியது?**

பொன்னப்பர் தாம் வாங்கிய நிலத்தை உழத் தொடங்கினர். ஓரிடத்தில் கலப்பைக் கொழு ஏதோ ஒரு பொருளில் சிக்கிக்கொண்டது. பொன்னப்பர் அந்த இடத்தைத் தோண்டிப் பார்த்தார். அங்கு ஒரு செப்புக் குடம் நிரம்பத் தங்க நாணயங்கள் இருந்தன.

**5. புதையலைக் கண்ட பொன்னப்பர் செய்தது என்ன?**

பொன்னப்பர் சென்னியப்பரிடம் ஓடினர்; "நண்பரே, நீர் எனக்கு விற்பனை செய்த நிலத்தில் தங்க நாணயங்கள் நிறைந்த குடம் இருக்கிறது. அது எனக்கு உரியது ஆகாது. எனவே, நீர் பெற்றுக்கொள்ளும்," என்று சென்னியப்பரை நோக்கிக் கூறினர்.

**6. சென்னியப்பர் ஏன் புதையலைப் பெற மறுத்தார்?**

சென்னியப்பர் தம் நிலத்தைப் பொன்னப்பருக்கு விற்றுவிட்டார். அதனுல் அந்த நிலத்தில் எது கிடைத்தாலும் அது பொன்னப்பருக்கு உரியதாகும். எனவே, அந்த நிலத்தில் கிடைத்த புதையலைப் பெற்றுக் கொள்ளச் சென்னியப்பர் மறுத்தார்.

**7. ஊர்த்தலைவர் கூறிய தீர்ப்பு என்ன?**

பொன்னப்பர் ஊர்த்தலைவரிடம் சென்று, சென்னியப்பர் குடத்தைப் பெற்றுக்கொள்ளும்படி செய்ய வேண்டும் என்று வேண்டினர். ஊர்த்தலைவர் சென்னியப்பரை அழைத்து விசாரணை செய்தார். சென்னியப்பர் தாம் நிலத்தை விற்றுவிட்டபடியால், அதில் கிடைத்த

புதையலைப் பெறுவது களவுக்கு ஒப்பாகும் என்று கூறினர். ஊர்த்தலைவர் சிந்தித்து, "பொன்னப்பரின் மகனுக்கும் சென்னியப்பர் மகளுக்கும் திருமணம் செய்து அவ்விருவருக்கும் புதையலை அன்பளிப்பாக வழங்க வேண்டும்," என்று தீர்ப்பளித்தார்.

## 19. நிலக்கரி பேசுகிறது

### அருஞ்சொற்பொருள்

புகழ்ந்து கொள்வது-பெருமையாகப் பேசிக்கொள்வது
அணிகளில் - நகைகளில்
வியப்பு - ஆச்சரியம்
வான் அளாவிய - வானம் நோக்கி உயர்ந்த
ஆறுமல் - அணையாமல்
போற்றுகிருர்கள் - பெருமையாகப் பேசுகிருர்கள்
உந்துவண்டி - மோட்டார் வண்டி
இயக்குகின்றீர்கள் - வேலை செய்ய வைக்கின்றீர்கள்
எண்ணற்ற-எண்ண முடியாத
சாலை - தெரு
நாகரிகம்-திருந்திய வாழ்க்கை
பாராட்டுவீர் - புகழ்வீர்.

### வினா-விடை

**1. நிலக்கரி எப்படி உண்டாகிறது?**

திடீரென்று நிலநடுக்கம் ஏற்பட்டபோது நிலத்தில் பிளவு உண்டாயிற்று. பெரிய மரங்கள் அடர்ந்த காடுகள் அப்படியே நிலத்திற்குள் மறைந்தன. நிலத்திற்கு அடியில் உள்ள நெருப்பால் அம்மரங்கள் எரிந்து கரியாகி விட்டன. நிலத்திலிருந்து வெட்டி எடுக்கப்படுவதால் இந்தக் கரி நிலக்கரி எனப்படுகிறது.

**2. நிலக்கரி எப்படி எடுக்கப்படுகிறது?**

நிலத்தைத் தோண்டி, நிலத்தின் அடியிலுள்ள கரிப் பாறைகளைக் கட்டிகளாக உடைத்து மேலே கொண்டு வருகின்றனர். இப்படிக் கட்டிகளாக உடைத்து எடுக்கப் படும் இடம் நிலக்கரிச் சுரங்கம் எனப்படுகிறது.

**3. நிலக்கரியின் உபயோகங்கள் எவை?**

நீரை ஆவியாக மாற்றி இரயிலை ஓட்ட நிலக்கரி உபயோகப்படுகிறது. பெரிய உந்து வண்டிகளையும் பெரிய கப்பல்களையும் நிலக்கரி ஓடச் செய்கிறது. ஆலைகளின் பெரிய இயந்திரங்களை இயக்க நீராவியை நிலக்கரி உண்டாக்குகிறது. நிலக்கரியின் உதவியால் இரும்பை உருக்கி எண்ணற்ற கருவிகள் செய்ய முடிகிறது.

**4. நிலக்கரியிலிருந்து உண்டாகும் பொருள்கள் எவை?**

தொற்று நோய்க் கிருமிகளை அழிக்கும் 'பினைல்' என்னும் பொருளும், விளையாட்டுப் பொருள்களைச் செய்யப் பயன்படும் 'பேக்குலைட்' என்னும் பொருளும், சாலைகளில் உருக்கி ஊற்றும் தார் என்னும் பொருளும் நிலக்கரியிலிருந்து உண்டாகும் பொருள்கள். நகைகளில் பதிக்கும் வைரம்கூட இறுகிய நிலக்கரியே ஆகும்.

**5. நிலக்கரியை எப்படிப் போற்றுகின்றனர்?**

நிலக்கரி மக்களுக்குப் பலவகைகளில் பயன்படுகிறது. இதன் சிறப்பை அறிந்தவர்கள் இதனைக் 'கறுப்பு வைரம்' என்று கூறிப் போற்றுகின்றனர்.

## இலக்கணம்

**1. பின்வரும் சொற்களுள் ஒருமைக்குப் பன்மையும் பன்மைக்கு ஒருமையும் எழுது:**

பங்காளிகள் - பங்காளி
பறவை - பறவைகள்
நல்லவன் - நல்லவர்
சிறுவன் - சிறுவர்
நாள் - நாள்கள்
கிழமை - கிழமைகள்
நல்லது - நல்லவை
சிறுமி - சிறுமிகள்

**2. பின்வரும் வினைச் சொற்களுக்குப் பன்மை வினைகளை எழுது:**

வந்தேன் - வந்தோம்
வந்தான் - வந்தார்
நடப்பேன் - நடப்போம்
பாடுவேன் - பாடுவோம்
வந்தாய் - வந்தீர்
வந்தது - வந்தன
வருவேன் - வருவோம்

**3. பின்வரும் வினைச் சொற்களுக்குப் பால் கூறு:**

வந்தது - ஒன்றன்பால்
படிக்கிறாள் - பெண்பால்
பறக்கின்றன - பலவின்பால்
பாடுவான் - ஆண்பால்
ஓடினார்கள் - பலர்பால்
பாய்கிறது - ஒன்றன்பால்
பேசுவார்கள் - பலர்பால்

# 20. சுற்றுலாக் கடிதம்

## அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| அன்பார்ந்த - அன்பு + ஆர்ந்த - அன்பு பொருந்திய | இடையில் - நடுவில் |
| சுற்றுலா - சுற்றுப்பயணம் | சமயத்தொடர்பு உடைய - மத சம்பந்தப்பட்ட |
| பேருந்துநிலையம் - பஸ் வண்டிகள் புறப்படும் இடம் | களிக்கின்ற - மகிழ்கின்ற |
| | அருந்தி - சாப்பிட்டு |

## வினா-விடை

**1. காஞ்சீபுரம் சிறந்த நகரம் என்பது எப்படி ?**

காஞ்சீபுரம் நெசவுத் தொழிலுக்குப் பெயர்பெற்ற நகரம். அங்குச் சில உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரியும் இருக்கின்றன. பல கோவில்கள் இருக்கின்றன. நகர அமைப்பில் காஞ்சீபுரம் சிறந்து விளங்குகிறது. பெரிய காஞ்சீபுரத்தில் உள்ள இராசவீதிகள் அகன்று ஒழுங்காய் அமைந்துள்ளன. சமயத் தொடர்பான இடங்கள் பல இருக்கின்றன.

**2. ஆடீசன் பேட்டையில் நடக்கும் வாணிகம் எது ?**

ஆடீசன்பேட்டையில் உயர்ந்த பட்டாடைகளும், பருத்தித் துணிகளும் விற்பனை செய்யப்படுகின்றன. இந்த வாணிகமே அங்கு நடைபெறும் முக்கிய வாணிகம்.

**3. காஞ்சீபுரத்திற்கு மக்கள் ஏன் வருகிறார்கள் ?**

தென்னாட்டுப் பழமை வாய்ந்த நகரங்களுள் சிறந்தது காஞ்சீபுரம். அங்குப் பல கோவில்கள் இருக்கின்றன. அவைகளையும், அங்குள்ள காட்சிகளையும் கண்டு களிக்கவே, பல ஊர்களிலிருந்து மக்கள் வருகின்றார்கள்.

# 21. நாமே நமக்குத் துணையானால்...?

## அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| நாமே நமக்குத் துணையானால் - நாம் செய்யவேண்டிய வேலைகளைப் பிறர் உதவி தேடாமல் நாமே செய்வோமானால் | வேறுளவோ - வேறு + உளவோ - வேறு இருக்கின்றனவோ |
| இதற்கோர் - இதற்கு + ஓர் | தேறி - வலிமை பெற்று |
| | உழைப்போமேல் - உழைத்தோம் ஆனால் |

### வினா-விடை

**நாமே நமக்குத் துணையாவதன் நன்மை யாது?**

நாமே நமக்குத் துணையானால், நாம் விரும்பும் பொருளும் நல்ல புகழும் தாமாகவே நம்மைத் தேடிவரும். கருணை, அன்பு, பொறுமை ஆகியவற்றை உடைய நல்லவர்களுக்கு, அவையே வெல்லும் கருவிகளாக அமையும். மன உறுதியும் ஊக்கமும்கொண்டு உழைத்தால் பள்ளம் மேடாகும். பாறைகள் பொடியாகும். கடவுளின் ஆணைப்படி நடந்தோமானால் இந்த உலகத்தில் எல்லாச் சுகங்களையும் தினந்தோறும் பெற்று வாழ்வோம்.

## 22. அணையைக் காத்த சிறுவன்

### அருஞ்சொற்பொருள்

அணை - நீரைத் தேக்கி வைப்பதற்காகக் கட்டப்படும் பெருஞ்சுவர்கள்

ஹாலந்து - ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள சிறிய நாடு

கூக்குரல் - பெரும் கூச்சல்

தீரச்செயல் - துணிவான செயல்

அருஞ்செயல் - அருமையான வேலை.

### வினா-விடை

**1. அணை ஏன் கட்டப்பட்டது?**

ஹாலந்து, கடலைச்சார்ந்த தாழ்வான நிலப்பரப்பில் இருக்கும் நாடு. ஆகையால், கடல் நீர் நாட்டுக்குள்ளே நுழையாதபடி அந்த நாட்டின் கடற்கரையில் ஓர் அணையைக் கட்டியிருக்கின்றனர்.

**2. பீட்டர் இருந்த இடம் எது?**

ஹாலந்து நாட்டில் ஹார்லெம் என்னும் பட்டினத்தில் பீட்டர் என்னும் சிறுவன் இருந்தான்.

**3. பீட்டர் எங்கிருந்து வந்துகொண்டிருந்தான்?**

பீட்டர் ஒருநாள் பக்கத்து ஊரிலிருந்த பாட்டியார் வீட்டுக்குச் சென்றான். மாலை வேளையானதும் பாட்டியாரிடம் விடைபெற்றுக்கொண்டு தன் வீட்டுக்கு வரத் திரும்பினான். அவன் அணைக்கட்டு வழியே நடந்து வந்துகொண்டிருந்தான்.

**4. பீட்டர் அணையில் எதைக் கண்டான்?**

அணையில் ஓரிடத்தில் ஒரு சிறு தொளை ஏற்பட்டு அதுவழியாக நீர் வரும் சத்தம் கேட்டது. உடனே

அவன் கீழே இறங்கிப்பார்த்தான் ; தொளைவழியே நீர் வருவதைக் கண்டான்.

**5. அவன் அணையைக் காக்க என்ன செய்தான் ?**

அணையில் தொளையிருப்பதை விட்டுச் சென்றால், வரவரத் தொளை பெரிதாகி, அணை உடைய நேரும். ஆகையால் அவன் அந்தத் தொளையில் தன் விரலை நுழைத்தான். உடனே தண்ணீர் வருவது நின்றது. இரவு முழுவதும் அவ்வழியில் எவரும் வரவில்லை. பீட்டரோ வைத்த விரலை எடாமல் இருந்தான். இரவில் அவனுக்குக் குளிரத் தொடங்கியது. குளிரால் அவன் உடல் விறைத்துவிட்டது.

**6. அனைவரும் பீட்டரை எப்படிப் புகழ்ந்தனர் ?**

விடியற்காலையில் அவ்வழியே வந்த ஓர் உழவர் பீட்டரைக் கண்டார்; கூக்குரலிட்டுப் பிறரை உதவிக்கு அழைத்தார். சிலர் பீட்டரை அப்புறப்படுத்தித் தொளையைப் பழுதுபார்த்தனர்; சிறுவனை எடுத்துச் சென்று அவன் தாயிடம் விட்டு நடந்ததைத் தெரி வித்தனர். அந்தச் செய்தி பட்டினம் முழுவதும் பரவியது. அனைவரும் அவனை 'ஹார்லெம் நகரத்து இளவீரன்' என்று புகழ்ந்தனர்.

**7. இதைப் பீட்டரே சொல்வதுபோல எழுது :**

என் பெயர் பீட்டர். நான் இருப்பது ஹாலந்து நாட்டில் உள்ள ஹார்லெம் பட்டினம். அது தாழ்வான நிலப்பரப்பில் இருப்பதால் கடல்நீர் உள்ளே நுழையாத படி தடுக்க ஓர் அணை கட்டப்பட்டிருக்கிறது.

ஒருநாள் நான் என் பாட்டியார் வீட்டுக்குச் சென்றேன். அங்கிருந்து மாலையில் என் வீடு திரும்பி னேன். அணைவழியே வந்துகொண்டிருந்தேன். அணை யில் ஒரு சிறு தொளை ஏற்பட்டு அதன் வழியே நீர் வருவதைப் பார்த்தேன். அதை அப்படியே விட்டால் தொளை பெரிதாகி அணை உடையலாம். எனவே, உடனே அந்தத் தொளையில் என் விரலை நுழைத்தேன். நீர் வருவது நின்றது. அவ்வழியே எவரும் வரவில்லை. இரவு முழுவதும் விரலை எடாமலே இருந்தேன். குளிர் தாங்கமுடியாமல் மயங்கிவிட்டேன்.

மறுநாள் காலை உழவர் ஒருவர் என்னைப்பார்த்து, பிறரை உதவிக்கு அழைத்து வந்தாராம். சிலர் என்னைத் தூக்கிச் சென்று என் தாயிடம் ஒப்படைத்தனராம் ;

தொளையையும் அடைத்துவிட்டனராம். அன்று முதல் ஊர்மக்கள் என்னை 'ஹார்லெம் நகரத்து இளவீரன்' என்று அழைத்து வருகின்றார்கள்.

## 23. எஸ்கிமோ மக்கள் வாழ்க்கை

### அருஞ்சொற்பொருள்

உறையுள் - வாழும் இடம்
தவழ்ந்தே - முழங்கைகளையும் முழங்கால்களையும் தரையில் ஊன்றி நகர்ந்து சென்றே
கதகதப்பாய் - சூடாய்
வேனிற்காலத்தில் - வெய்யில் காலத்தில்
வெப்பம் - சூடு

### வினா-விடை

**1. எஸ்கிமோக்கள் எங்கு வாழ்கிறார்கள்?**

எஸ்கிமோக்கள் வடகடலில் உள்ள கிரீன்லாந்து என்னும் தீவில் வாழ்கின்றார்கள். அத்தீவில் எங்கும் பனியும் பனிக்கட்டியுமே காணப்படும்.

**2. எஸ்கிமோக்களுக்கு எது உணவாகின்றது?**

எஸ்கிமோக்களுக்குப் பனிக்கடலில் வாழும் சீல், வால்ரஸ் என்னும் விலங்குகளின் இறைச்சியே உணவாகின்றது.

**3. எஸ்கிமோக்களுக்கு உடை எது?**

எஸ்கிமோக்கள் சீல், வால்ரஸ் என்னும் விலங்குகளின் தோலை உரித்து, அதையே பெரியவர்களும் குழந்தைகளும் உடையாகப் பயன்படுத்துகிறார்கள்.

**4. எஸ்கிமோக்கள் அறியாதவை என்ன?**

காய்கறிகளும், பழங்களும், பூக்களும், அரிசியும், கோதுமையும் எஸ்கிமோக்கள் கண்டறியாதவை.

**5. 'ஹார்ப்பூன்' என்பது யாது?**

ஹார்ப்பூன் என்பது எஸ்கிமோக்கள் பயன்படுத்தும் ஈட்டியாகும். வில், அம்பு போன்றவைகளையும் அவர்கள் வேட்டையில் பயன்படுத்துவார்கள்.

**6. எஸ்கிமோக்கள் வீடு எதனால் கட்டப்பட்டது?**

எஸ்கிமோக்களின் வீடு பனிக்கட்டிப் பாளங்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்படுவது ஆகும். அவ்வீடு 'இகுளு' எனப்படுகிறது. பனி வீடு என்பதே

இச்சொல்லின் பொருள். இப்பனி வீடு, வடிவத்தில் ஒரு பெரிய கூடையைக் கவிழ்த்து வைத்ததுபோலக் காணப் படும். அதில் சிறிய நுழைவாயில் ஒன்று உண்டு. அதில் ஒருவர் தரையில் தவழ்ந்தே நுழையமுடியும். வீட்டின் உட்புறம் சூடாய் இருக்கக் கூரையின் உட்புறம் தோலால் மூடப்பட்டிருக்கும். வீட்டு வாயிலில் கதவுக்குப் பதில் ஒரு தோல் திரை தொங்கும்.

**7. வேனிற்காலத்தில் அவர்கள் வாழ்வது எப்படி ?**

வேனிற்காலத்தில் எஸ்கிமோக்கள் தோலால் கூடாரங் களை அமைத்து அவற்றில் வாழ்வார்கள்.

**8. நீரில் அவர்கள் எப்படி வேட்டையாடுகிறார்கள் ?**

தோலால் செய்யப்பட்ட 'காயாக்கு' என்னும் படகில் ஏறிக் கடலில் சென்று சீல், வால்ரஸ் என்னும் நீரில் வாழும் விலங்குகளை வேட்டையாடுவார்கள்.

**9. 'ஸ்லெட்ஜ்' என்பது எதற்குப் பெயர்?**

எஸ்கிமோக்கள் ஏறிச் செல்லும் வண்டிக்கு 'ஸ்லெட்ஜ்' என்பது பெயர். இதற்குச் சக்கரம் இல்லை. இது பனிக்கட்டியின் மீது சறுக்கிச் செல்லும். நாய்களை இதில் கட்டி ஓட்டுகிறார்கள். நாய்களை அடித்து ஓட்டச் சாட்டையைப் பயன்படுத்துகிறார்கள். நாய்கள் இவ் வண்டிகளை இழுத்துக்கொண்டு வேகமாய் ஓடும்.

**10. அவர்கள் பயன்படுத்தும் விளக்கு எது ?**

சீல், வால்ரஸ் விலங்குகளின் இறைச்சிக் கொழுப்பை எஸ்கிமோக்கள் விளக்கு எரிக்கப் பயன்படுத்துகிறார்கள். அந்த விளக்கு வெளிச்சம் தருவதுடன் வெப்பத்தையும் தரும். அங்குப் பாசியைப்போலத் தரையில் படரும் ஒருவகைப் பொருளே விளக்குக்கு வர்த்தியாகும்.

**11. பொருள் எழுது :**

கரி - யானை, அடுப்புக்கரி. கறி - இறைச்சிக் கறி, காய் கறி முதலிய துணை உணவு. தோல் - உடல் முழு வதும் போர்வை போல மேற்பகுதியில் உள்ள உறுப்பு. தோள் - மார்பில் கை ஒட்டியுள்ள இடம். திரை - அலை, திரைச் சீலை. திறை - சிறிய அரசர்கள் பெரிய அரசருக் குக் கட்டும் வரி.

# 24. குந்தியும் கன்னனும்

## அருஞ்சொற்பொருள்

இருக்கை - உட்காரும் பீடம்
கடைத்தலை - முன் வாயில்
பாண்டவர் - பாண்டு மன்னரின் பிள்ளைகளாகிய தருமன், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகிய ஐவர்
வெளியரங்கம் - வெளி மண்டபம்
அருந்தவப்பயன் - அருமையான தவம் செய்ததன் பலன்
புறக்கணித்தீர் - ஒதுக்கினீர்
செஞ்சோற்றுக் கடன்-செய்ந் நன்றிக் கடன்
போராடுவது - சண்டையிடுவது
ஈவேன் - கொடுப்பேன்
பார்த்தன் - அருச்சுனன்
அரவக்கணை - பாம்பு அம்பு
ஏவுவாய் - செலுத்துவாய்
ஆண்மை - வீரம்

## வினா-விடை

**1. குந்தியைக் கன்னன் எப்படி வரவேற்றான்?**

குந்தி தேவி, கன்னன் அரண்மனைக்கு வந்தாள். கன்னன் குந்தியை உள்ளே அழைத்துவரச் சொல்லி விட்டுச் சபையோர்களை வெளிமண்டபத்துக்கு அனுப்பி விட்டான்; குந்தியைத் தனியே சந்தித்து அன்புடன் வரவேற்றுப் பீடத்தில் உட்கார வைத்தான்; வந்த காரணத்தை அன்போடு விசாரித்தான்.

**2. குந்தி கன்னனிடம் கூறிய செய்தி யாது?**

குந்தி தேவி கன்னனை நோக்கி, "மகனே யான் உனக்குத் தாய். அந்த உண்மையை உனக்குத் தெரிவிக்கவே வந்தேன். பாண்டவர் உனக்குத் தம்பியர். நீ அவர்களுடன் போரிடாமல் சேர்ந்து வாழ, வேண்டிக் கொள்ளக் கருதியே வந்தேன்," என்று கூறினாள்.

**3. கன்னன் மறுத்துக் கூறிய காரணம் யாது?**

குந்தி தேவியை நோக்கிக் கன்னன், "அன்னையீர், என்னைப் பெற்ற நீர் என்ன காரணத்தாலோ புறக்கணித்தீர். அன்று முதல் இன்று வரையில் துரியோதனன் என்னை உயிர்த்துணைவனாய்க் கொண்டிருக்கின்றான்; என்னை அங்க நாட்டுக்கு அரசன் ஆக்கினான்; என்னுடன் இருந்து உண்டான்; தன் தம்பியரும் சுற்றத்தாரும் என்னை வணங்கச் செய்தான். அவன் எனக்கு அளித்த செஞ்சோற்றுக் கடனைக் கழிப்பதே எனக்குப் புகழும் தருமமும் ஆகும். போரில் அவனுக்காகப்

போராடுவதே எனது கடமை,'' என்று தான் பாண்டவருடன் சேர முடியாமைக்குக் காரணம் கூறினன்.

**4. குந்தி கன்னனிடம் வேண்டிய வரங்கள் யாவை?**

கன்னனிடம் குந்தி தேவி வேண்டிய வரங்கள் இரண்டு ஆகும். ஒன்று பாம்புக்கணையை அருச்சுனன் மீது இரண்டாம் முறையாக விடக்கூடாது என்பது. மற்றென்று அருச்சுனன் தவிர, மற்ற நான்கு தம்பிகளையும் கன்னன் கொல்லக்கூடாது என்பது.

**5. குந்திக்குக் கன்னன் அளித்த பதில் யாது?**

"ஒரு முறை தொடுத்த கணையால் அருச்சுனன் இறவாமல் இருந்தால், மறுகணை தொடுப்பது அரசருக்கு ஆண்மையும் அறமும் ஆகாது. நான் ஒரே முறை பாம்புக்கணையைப் பார்த்தன்மீது தொடுப்பேன். மற்றவரும் பிழைப்பர்,'' என்று குந்திகேட்ட வரங்களைக் கன்னன் அளித்து, தானும் இரு வரங்கள் வேண்டினன்.

**6. கன்னன் குந்தியிடம் வேண்டிய வரங்கள் எவை?**

கன்னன் குந்தியிடம் இரண்டு வரங்கள் வேண்டினன். அவற்றுள் ஒன்று, "அருச்சுனன் ஏவும் அம்பினல் நான் போர்க்களத்தில் வீழ்ந்தால், நீர் என்னைத் தழுவி எடுத்து நான் உமக்கு மகன் என்பதை உலகத்தார் அறியச் செய்ய வேண்டும்,'' என்பது. இரண்டாவதாகக் கன்னன் வேண்டியது, "போர் முடியும் வரை நான் உமக்கு மகன் என்பதை என் தம்பியர் அறியாதபடி பாதுகாக்க வேண்டும்,'' என்பதாகும்.

**7. பொருள் எழுது :**

அரம் - இரும்பைத் தேய்க்கும் ஓர் எஃகுக் கருவி. அறம் - தருமம். கணை - அம்பு. கனை - குதிரையின் ஒலி. கலம் - பாண்டம். களம் - இடம்.

# 25. இளமை நினைவுகள்

## அருஞ்சொற்பொருள்

**நிகழ்ந்த** - நடைபெற்ற
**நிகழ்ச்சி** - நடைபெற்ற செய்தி
**கல்வித்துறை ஆய்வாளர்** - பள்ளிக்கூடங்களைத் தணிக்கை செய்யும் அதிகாரி
ஆய்வுக்கு - தணிக்கைக்கு
பிழைபட - தவருக
குடிகொண்டுவிட்டது - நிலைத்து விட்டது
குழு - கூட்டம்

| | |
|---|---|
| அகலவில்லை - நீங்கவில்லை | அலுப்பு - சோர்வு |
| இசைவை - சம்மதத்தை | அல்லும் - இரவும் |

## வினா-விடை

**1. காந்தியடிகள் வகுப்பிற்கு ஆய்வாளர் வந்த போது நிகழ்ந்தது யாது?**

காந்தியடிகள் வகுப்பிற்கு ஆய்வாளர் வந்த போது, ஐந்து ஆங்கிலச் சொற்களைச் சொல்லி எழுதச் சொன்னார். காந்தியடிகள் 'கெட்டில்' என்னும் ஆங்கிலச் சொல்லைப் பிழைபட எழுதினார். அதைக்கண்ட ஆசிரியர், காந்தியடிகளின் காலை மிதித்துப் பக்கத்துப் பையனைப் பார்த்து எழுதும்படி எச்சரித்தார். ஆனால் காந்தியடிகள் அவ்வாறு செய்யவில்லை. அதை அவர் விரும்பவில்லை.

**2. காந்தியடிகள் கண்ட திரைப்படம் யாது?**

காந்தியடிகள் ஊருக்குத் திரைப்படம் காட்டும் குழுவினர் வந்தனர். காந்தியடிகள் பார்த்த படத்தில் சிரவணன், குருடான தன் பெற்றோரைக் காவடியில் வைத்துத் தூக்கிச் செல்லும் காட்சி ஒன்று. இந்தக் காட்சி அவர் மனத்தில் குடிகொண்டு விட்டது. தாம் பின்பற்றி நடக்க இது நல்ல முன்மாதிரியாகும் என்று அவர் தமக்குள்ளே சொல்லிக்கொண்டார்.

**3. காந்தியடிகள் கண்ட நாடகம் யாது?**

நாடகக் குழு ஒன்று காந்தியடிகள் ஊரில் அரிச்சந்திர நாடகத்தை நடித்தது. காந்தியடிகள் தம் தந்தை இசைவைப் பெற்று அந்த நாடகத்தைப் பார்த்தார். அது அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. அதைப் பலமுறை பார்த்தும் அவருக்கு அலுப்புத் தோன்றவில்லை.

**4. அவர் வாழ்க்கையில் அது எவ்வாறு பயன்பட்டது?**

காந்தியடிகள் அரிச்சந்திர நாடகத்தைப் பார்த்த பின், ''உண்மையே பேசி, அதனால் எந்தத் துன்பம் வரினும் ஏற்றுக்கொள்ளவேண்டும்,'' என்னும் குறிக்கோள் அவர் உள்ளத்தில் பதிந்தது. இவ்வாறு அந்த நாடகம் அவர் வாழ்க்கையில் பயன்பட்டது.

**5. வாக்கியங்களில் அமைத்து எழுது :**

(அலுப்பு, அனுமதி, குறிக்கோள், திண்ணம்)

(1) பாரதியார் பாட்டை எத்தனை முறை படித்தாலும் அலுப்பு ஏற்படுவதில்லை.

(2) என் தந்தையார் அனுமதியின்றி நான் வெளியே போவதில்லை.
(3) நன்ருகப் படித்துப் பெரிய அறிஞனுக விளங்க வேண்டும் என்பது எனது குறிக்கோள்.
(4) நான் நன்ருகப் படித்தால் தேர்வில் வெற்றி பெறுவது திண்ணம்.

## 26. நீட்டலளவையும் முகத்தலளவையும்

### அருஞ்சொற்பொருள்

**நீட்டல் அளவை** - நீளமான பொருள்களை அளக்கும் கருவி
**மேலினம்** - அதிக அளவு
**கீழினம்** - குறைந்த அளவு
**அலகு** - கூறு
**சிற்றலகு** - சிறுகூறு
**பேரலகு** - பெறுங்கூறு
**கையாளப்பட்டு** - உபயோகிக்கப்பட்டு

### வினு-விடை

**1. கெஜக்கோலுக்கும் மீட்டர்க்கோலுக்கும் அளவில் உள்ள வேறுபாடு யாது?**

கெஜக்கோலின் நீளம் 36 அங்குலம். மீட்டர்க்கோலின் நீளம் ஏறத்தாழ 39·37 அங்குலம். எனவே, கெஜக்கோலை விட மீட்டர்க் கோல் ஏறத்தாழ 3·37 அங்குலம் அதிகமாகும்.

**2. மெட்ரிக்கு முறையின் அடிப்படை யாது?**

மெட்ரிக்கு முறை தசாமிசத்தை அடிப்படையாகக் கொண்டது.

**3. தசாமிசம் என்ருல் என்ன?**

தசம் + அமிசம் என்னும் இரண்டு சொற்கள் சேர்ந்து தசாமிசம் என்று ஆகிறது. தசம் என்னும் சொல்லுக்குப் பத்து என்பது பொருள். அமிசம் என்பது கூறு அல்லது பங்கு எனப் பொருள்படும்.

**4. பல நாடுகளிலும் மெட்ரிக்கு முறை கையாளப் படுவதற்குக் காரணம் என்ன?**

மெட்ரிக்கு முறையில் அலகுகள் பத்து மடங்குகளாகப் பெருகும். அல்லது பத்தில் ஒன்ருகக் குறையும். எனவே, மேலினமாகவோ, கீழினமாகவோ மாற்றுவது எளிது. இதனுலேயே பெரும்பாலும் பல நாடுகளிலும் இம்முறை கையாளப்பட்டு வருகிறது.

**5. நீட்டல் அளவையின் சிற்றலகுகள், பேரலகுகள் எவை?**

நீட்டல் அளவையில் மீட்டர் என்பதும் அதன் அலகு களும் பயன்பட்டு வருகின்றன. அதில் மில்லி மீட்டர், சென்டி மீட்டர், டெசி மீட்டர் என்பவை சிற்றலகுகள். டெக்கா மீட்டர், ஹெக்டா மீட்டர், கிலோ மீட்டர் ஆகியவை பேரலகுகள்.

**6. முகத்தல் அளவையின் சிற்றலகுகள், பேரலகு கள் எவை?**

முகத்தல் அளவையில் 'லிட்டர்' என்னும் அளவும் அதன் அலகுகளும் பயன்பட்டு வருகின்றன. அதில் மில்லி லிட்டர், சென்டி லிட்டர், டெசி லிட்டர் என்பவை சிற்றலகுகள். டெக்கா லிட்டர், ஹெக்டா லிட்டர், கிலோ லிட்டர் என்பவை பேரலகுகள்.

**7. இரு பொருள் எழுது :**

(அலகு, படி, மரக்கால், கலம், பறை)

அலகு - அளவையில் ஒரு கூறு, பறவையின் அலகு. படி - எட்டு ஆழாக்குக் கொண்ட பழைய முகத்தல் அளவை, பாடம் படி. மரக்கால் - எட்டுப் படி கொண்ட பழைய முகத்தல் அளவை, மரத்தால் செய்யப்பட்ட கால். கலம் - பன்னிரண்டு மரக்கால் கொண்ட பழைய முகத்தல் அளவை, பாத்திரம். பறை - ஐந்து மரக்கால் கொண்ட பழைய முகத்தல் அளவை, ஒரு தோற் கருவி.

**8. பிரித்தெழுது :** தசாமிசம் - தசம் + அமிசம். சிற்றலகு - சிறுமை + அலகு. பேரலகு - பெருமை + அலகு.

# செய்யுட் பாடம்

## I. நல்வழி

இந்நூலை எழுதியவர் ஔவையார் என்னும் தமிழ்ப் பெரும் புலவர் ஆவார். இது நாற்பது வெண்பாக்கள் உடையது. ஒழுக்க வழிகளைக் கூறுவதால் இதற்கு நல்வழி என்னும் பெயர் வந்தது.

**சாதி இரண்டொழிய வேறில்லை ; சாற்றுங்கால்**
**நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்**
**இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர்**
**பட்டாங்கில் உள்ள படி.** (1)

சொற்பொருள்

சாற்றுங்கால் - (ஆராய்ந்து) சொல்லுமிடத்து
மேதினியில் - இந்த உலகத்தில்
சாதி இரண்டு ஒழிய-சாதிகள் இரண்டே தவிர
வேறு இல்லை - வேறு ஒன்றும் இல்லை
நீதி வழுவா - நீதி தவருத
நெறி முறையின் - நல்ல வழி நின்று முறையோடு
இட்டார் - (இல்லாதவருக்குக்) கொடுப்பவர்
பெரியோர் - மேல் சாதியார்
இடாதார் - கொடாதவர்
இழிகுலத்தோர் - கீழ்ச் சாதியார்
பட்டாங்கில் - உண்மையை விளக்கும் நூல்களில் (இது)
உள்ளபடி - சொல்லியுள்ளபடி ஆகும்.

(கருத்துரை) ஏழைகளுக்குக் கொடுப்பவர் உயர்ந்த சாதி. கொடாதவர் தாழ்ந்த சாதி எனச் சாதிகள் இரண்டே. இவை தவிர உலகில் வேறு சாதியில்லை.

**ஆன முதலின் அதிகம் செலவானல்**
**மானம் அழிந்து மதிகெட்டு,—போனதிசை**
**எல்லார்க்கும் கள்ளனய், ஏழ்பிறப்பும் தீயனய்,**
**நல்லார்க்கும் பொல்லனும்; நாடு. (2)**

சொற்பொருள்

ஆன முதலின் - தனக்கு வரும் முதற் பொருளைவிட
அதிகம் செலவானல் - அதிகம் செலவு செய்தால்
மானம் அழிந்து - பெருமை கெட்டு
மதி கெட்டு - அறிவை இழந்து
போன திசை - சென்ற திசைகளில்
எல்லார்க்கும் கள்ளனய் - எல்லார்க்கும் திருடனகி
ஏழ் பிறப்பும் - ஏழுவகையான பிறப்புகளிலும்
தீயன் ஆய் - கெட்டவனகி
நல்லார்க்கும் பொல்லன் ஆம்- நல்லவர்க்கும் பொல்லாதவனவான்
நாடு - இதை நீ அறிவாயாக.

(க - ரை.) வரவுக்குமேல் செலவு செய்பவன் பழி பாவங்களையும் பலவிதத் துன்பங்களையும் அடைவான்.

**ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும்அந் நாளுமவ்வாறு**
**ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு**
**நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனலும்**
**‘ இல்லை ’என மாட்டார் இசைந்து. (3)**

சொற்பொருள்

**ஆற்றுப் பெருக்கு அற்று**-ஆற்றின் வெள்ளம் வற்றி
**அடி சுடும்** - (நடப்பவரின்) பாதங்களைச் சுடுகின்ற
**அந்நாளும்** - அக்காலத்திலும்
**அவ்வாறு ஊற்றுப் பெருக்கால்** - அந்த ஆறானது ஊற்றிலிருந்து சுரக்கும் நீரினால்
**உலகு ஊட்டும்** - உலகின் உயிர்களை உண்பிக்கும்
**நல்லகுடிப் பிறந்தார்** - உயர் குடியில் பிறந்தவர்
**நல்கூர்ந்தார் ஆனாலும்** - வறுமை அடைந்தாலும்
**ஏற்றவர்க்கு** - இரந்தவருக்கு
**இசைந்து இல்லை என மாட்டார்** - மனம் ஒப்பி இல்லை என்று சொல்லமாட்டார்.

(க - ரை.) உயர்ந்த குடும்பத்தில் பிறந்த பெரியார் வறுமை அடைந்த காலத்திலும் இல்லையென்று சொல்லாமல் முடிந்தவரை பிறருக்கு உதவி செய்வார்கள்.

**வேதாளம் சேருமே ; வெள்ளெருக்குப் பூக்குமே ;**
**பாதாள மூலி படருமே ;—மூதேவி**
**சென்றிருந்து வாழ்வளே ; சேடன் குடிபுகுமே ;**
**மன்றோரம் சொன்னார் மனை.** (4)

சொற்பொருள்

**மன்றுஓரம் சொன்னார் மனை** - நீதிமன்றத்தில் ஒருதலைப் பக்கமாகப் பொய்ச் சாட்சி சொன்னவருடைய வீட்டில்
**வேதாளம் சேரும்** - பெரும் பேய்கள் அடையும்
**வெள் எருக்கு** - வெள்ளை எருக்கஞ் செடி
**பூக்கும்** - (முளைத்து) பூக்கும்
**பாதாள மூலி** - பாதாள மூலி என்னும் கொடி
**படரும்** - படரும்
**மூதேவிசென்று** - மூதேவியானவள் போய்
**இருந்து வாழ்வள்** - தங்கி வாழ்வாள்
**சேடன் குடிபுகும்** - பாம்புகள் குடியிருக்கும்.

(க - ரை.) நீதிமன்றத்தில் பொய்ச் சாட்சி சொன்னவர் வீடு பாழடைந்து அழியும்.

**ஆற்றங் கரையின் மரமும் அரசறிய**
**வீற்றிருந்த வாழ்வும் விழும்அன்றே ?—ஏற்றம்**
**உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்**
**பழுதுண்டு வேறோர் பணிக்கு.** (5)

சொற்பொருள்

**ஆற்றங்கரையின்** - ஆற்றின் கரையில் உள்ள
**மரமும்** - (பெரிய) மரமும்
**அரசு அறிய** - அரசன் மதிக்கும்படி

வீற்றிருந்த வாழ்வும் - உயர்வாக இருந்த வாழ்வும்
விழும் அன்றே - அழியும் அல்லவா ? (ஆதலால்)
ஏற்றம் - உயர்வான வாழ்க்கை
உழுது உண்டு - பயிர்த் தொழில் செய்து சாப்பிட்டு
வாழ்வு - வாழ்தலே ஆகும்
அதற்கு - பயிர்த் தொழிலுக்கு
ஒப்பு இல்லை - சமமான தொழில் வேறு இல்லை
வேறு ஓர் பணிக்கு - மற்றத் தொழில்களுக்கு
பழுது உண்டு-குற்றம் உண்டு.

(க-ரை.) மற்றத் தொழில்களைவிட உழுது பயிர் செய்து வாழ்வதே சிறந்த தொழிலாகும்.

**ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்டு ஒன்ருகும் ;**
**அன்றி, அதுவரினும் வந்தெய்தும் ;—ஒன்றை**
**நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும் ;**
**எனையாளும் ஈசன் செயல். (6)**

சொற்பொருள்

ஒன்றை நினைக்கின் - ஒரு பொருளை நினைத்தால்
அதுஒழிந்திட்டு - அப்பொருள் ஒழிந்து
ஒன்று ஆகும் - வேறு ஒரு பொருள் கைகூடும்
அன்றி - அப்படி அல்லாமல்
அதுவரினும் - நினைத்த அதுவே வந்தாலும்
வந்து எய்தும் - கைகூடும்
ஒன்றை நினையாத முன் - ஒரு பொருளை நாம் நினையாத முன்னரே
வந்து நிற்பினும் நிற்கும் - வந்து கைகூடினுலும் கூடும் (இவையெல்லாம்)
எனை ஆளும் - என்னை ஆளுகின்ற
ஈசன் செயல் - கடவுளுடைய செயலாகும்.

(க-ரை.) ஒரு பொருள் கைகூடுவதும் கூடாததும் கடவுள் செயலாகும். மனிதர் நினைக்கிறபடி ஒன்றும் நடவாது.

**மரம்பழுத்தால் வெளவாலை ' வா ' என்று கூவி**
**இரந்தழைப்பார் யாவரும் அங்கு இல்லை—சுரந்தமுதம்**
**கற்ரு தரல்போல் கரவாது அளிப்பரேல்**
**உற்ருர் உலகத் தவர். (7)**

சொற்பொருள்

மரம் பழுத்தால் - மரத்தில் பழம் பழுத்திருந்தால்
வெளவாலை - வெளவாலை
வா என்று - இங்கே (பழம் தின்ன) வா என்று
கூவி - கூப்பிட்டு
இரந்து அழைப்பார் - வேண்டி அழைப்பவர்
அங்கு - அம்மரத்தடியில்
யாவரும் இல்லை - ஒருவரும் இல்லை

| | |
|---|---|
| **கற்று-கன்று + ஆ** - கன்றை ஈன்ற பசு | **கரவாது** - ஒளிக்காமல் |
| **அமுதம் சுரந்து** - பாலைச் சுரந்து | **அளிப்பரேல்** - கொடுத்தால் |
| **தரல்போல்** - கொடுப்பதுபோல் | **உலகத்தவர்** - உலக மக்கள் |
| | **உற்றார்** - அவருக்கு உறவினர் ஆவார்கள். |

(க – ரை.) உதவி செய்பவருக்கு எல்லாரும் தாமே உறவினராவர்.

**ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்**
**மாறிடும் ஏறிடும் ; மாநிலத்தீர் !—சோறிடும் ;**
**தண்ணீரும் வாரும் ; தருமமே சார்பாக**
**உண்ணீர்மை வீறும் உயர்ந்து.** (8)

சொற்பொருள்

| | |
|---|---|
| **மாநிலத்தீர்** - பெரிய உலகத்தில் உள்ளவர்களே ! | **சோறு இடும்** - ஏற்பவர்களுக்குச் சோறு போடுங்கள் |
| **செல்வம்** - செல்வமானது | **தண்ணீரும் வாரும்** - தண்ணீரும் கொடுங்கள் |
| **ஆறு இடும்** - ஆறு தன் வெள்ளத்தினால் உண்டாக்குகின்ற | **தருமமே சார்பு ஆக** - இந்தத் தருமமே துணையாக |
| **மேடும் மடுவும்போல் ஆம்** - மேடும் பள்ளமும் போலாகி | **உள் நீர்மை** - மனத்தின் பண்பு |
| **மாறிடும் ஏறிடும்** - குறைவதும் உயர்வதுமாக இருக்கும் (ஆதலால்) | **உயர்ந்து வீறும்** - ஓங்கிச் சிறந்து விளங்கும். |

(க – ரை.) செல்வம் நிலையற்றது. ஆகையால் அது உள்ளபோதே அறச்செயல்களைச் செய்யவேண்டும். இரப்பவர்களுக்குச் சோறும் தண்ணீரும் கொடுத்தால் மனப் பண்பு சிறந்து விளங்கும்.

**வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் ; வேழத்தில்**
**பட்டுருவும் கோல், பஞ்சில் பாயாது ;—நெட்டிருப்புப்**
**பாரைக்கு நெக்குவிடாப் பாறை, பசுமரத்து**
**வேருக்கு நெக்கு விடும்.** (9)

சொற்பொருள்

| | |
|---|---|
| **வேழத்தில்**-யானையின் உடலில் | பஞ்சில் பாயாது |
| **பட்டு உருவும்** - பாய்ந்து உருவிச் செல்கின்ற | **நெடு இருப்புப் பாரைக்கு நெக்குவிடா** - நீண்ட இரும்பால் ஆன கடப்பாரைக்குப் பிளவுபடாத |
| **கோல்** - அம்பானது | |
| **பஞ்சில் பாயாது** - மெல்லிய | |

பாறை - கருங்கல் பாறை
பசுமரத்தின் வேருக்கு - இள மரத்தின் வேருக்கு
நெக்கு விடும் - பிளவு படும் (அது போல)
வெட்டெனவை - கடுமையான சொற்கள்
மெத்தெனவை - மென்மை யான சொற்களை
வெல்லாவாம் - வெல்லமாட்டா.

(க-ரை.) இனிய சொற்களால் வலியவர்களையும் வென்றுவிடலாம்.

**பூவாதே காய்க்கும் மரமும்உள ! மக்களுளும்**
**ஏவாதே நின்றுணர்வார் தாம்உளரே ;—தூவா**
**விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே, பேதைக்கு**
**உரைத்தாலும் தோன்றாது உணர்வு. (10)**

சொற்பொருள்

பூவாதே காய்க்கும் - பூக்காமலே காய்க்கின்ற
மரமும்உள - மரங்களும் இருக்கின்றன
மக்களுளும் - மனிதர்களிலும்
ஏவாதே நின்று - கட்டளை இடாமல் இருந்தும்
உணர்வார் உளர் - (தாமே) அறிந்து செய்யக்கூடியவர்களும் இருக்கின்றார்கள்
தூவா விரைத்தாலும் - தூவி விதைத்தாலும்
நன்று ஆகா - நன்றாக முளைத்துப் பயன்தராத
வித்து என - விதையைப் போல
பேதைக்கு - அறிவில்லாதவனுக்கு
உரைத்தாலும் - நன்றாக விளக்கிச் சொன்னாலும்
உணர்வு தோன்றாது - அறிவு உண்டாகாது.

(க-ரை.) அறிவுடையோர் குறிப்பறிந்து செய்வர். அறிவில்லாதவர்கள் விளக்கிச் சொன்னாலும் செய்யும் திறமையற்றவர்கள்.

வினா-விடை

**1. நல்வழி என்னும் பெயர் வரக் காரணம் என்ன ?**

இந்த நூல் நல்ல ஒழுக்க வழிகளைக் கூறும் பாடல்கள் அடங்கியது. ஆகையால், இதற்கு நல்வழி என்னும் பெயர் அமைந்தது. இதனை எழுதியவர் ஔவையார்.

**2. ஔவையார் யார் ? அவர் எழுதிய நூல்கள் எவை ?**

ஔவையார் அறிவு நிறைந்த அம்மையார். பெரும் புலவர். அவர் எழுதிய நூல்கள் நல்வழி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம் முதலியவை.

**3. சாதிகள் எத்தனை? அவை எவை?**

சாதிகள் இரண்டே ஆகும். இல்லாதவர்களுக்குக் கொடுத்து உதவி செய்பவர் உயர்ந்த சாதி. அப்படிக் கொடாதவர் தாழ்ந்த சாதி.

**4. வரவுக்குமேல் செலவு செய்பவன் கதி யாது?**

வரவுக்குமேல் செலவு செய்பவனுடைய பெருமை கெடும். அறிவு அழியும். செல்லும் திசைகளில் எல்லா ருக்கும் திருடன் ஆவான். ஏழுவகைப் பிறவியிலும் கெட்டவன் ஆவான். தன்னிடம் அன்பு உடையவர் களுக்கும் பொல்லாதவன் ஆவான்.

**5. நல்ல குடியில் பிறந்தவர்கள் தன்மை யாது?**

நல்ல குடியில் பிறந்த பெரியவர்கள் வறுமை அடைந் தாலும், தம்மிடம் வந்து கேட்பவர்களுக்கு, இல்லை என்று கூறுமல் தம்மால் முடிந்த அளவு உதவி செய்வார்கள்.

**6. பொய்ச் சாட்சி சொன்னவர் கதி யாது?**

நீதிமன்றத்தில் பொய்ச் சாட்சி சொன்னவர்கள் வீட் டில் பெரும் பேய்கள் போய்ச்சேரும். வெள்ளை எருக்கஞ் செடிகள் பூக்கும். பாதாள மூலி என்னும் கொடி படரும். மூதேவி நிலையாக வாழ்வாள். பாம்புகள் குடி புகும்.

**7. பயிர்த்தொழிலின் பெருமை யாது?**

பயிர்த்தொழில் செய்து உண்டு வாழ்வதே உயர்ந்த வாழ்க்கையாகும். மற்றத் தொழில்களுக்குப் பழுது உண்டு. ஆகையால், பயிர்த் தொழிலுக்குச் சமமான தொழில் வேறு ஒன்றும் இல்லை.

**8. ஈசன் செயல்கள் எவை?**

நாம் ஒன்றை நினைத்தால் அது தவறி வேறு ஒன்று கைகூடும். அல்லது நினைத்ததே கைகூடினாலும் கூடும். ஒன்றை நாம் நினைக்காமல் இருக்கும்போது அது தானே கைகூடினாலும் கூடும். இவை எல்லாம் ஈசனுடைய செயல்கள் ஆகும்.

**9. உலக மக்கள் எப்போது உறவினர் ஆவர்?**

தம்மிடம் உள்ள பொருளை மறைக்காமல் பிறருக்குக் கொடுப்பவருக்கு உலக மக்கள் உறவினர் ஆவர்.

**10. செல்வம் எப்படிப்பட்டது?**

ஆறு உண்டாக்கும் மேடும் பள்ளமும்போலச் செல் வம் வளர்வதும் குறைவதுமாய் இருக்கும். ஆகையால்,

இரப்பவர்களுக்குச் சோறும், குடிக்கத் தண்ணீரும் கொடுக்கவேண்டும்.

**11. கடுஞ்சொற்கள் இனிய சொற்களை வெல்ல மாட்டா என்பதை விளக்கு :**

யானையின் உடலில் பாய்ந்து உருவிச் செல்லும் அம்பு பஞ்சில் பாய்ந்து செல்லாது. நீண்ட கடப்பாரைக் குப் பிளவுபடாத கருங்கல் பாறை பசுமரத்தின் வேருக் குப் பிளவுபடும். அதுபோலக் கடுமையான சொற்கள் இனிய சொற்களை வெல்லமாட்டா.

**12. அறிவுடையோர், அறிவில்லாதவர் தன்மைகள் யாவை ?**

அறிவுடையோர் பிறர் கட்டளை யிடாமலே செய்ய வேண்டிய செயலைத் தாமே குறிப்பு அறிந்து செய் வார்கள். அறிவில்லாதவனுக்கு எவ்வளவு விளக்கிச் சொன்னாலும் அறிவு உண்டாகாது.

## II. நீதி வெண்பா

இது நீதியைக் கூறும் 100 வெண்பாப் பாடல்கள் அடங்கிய நூல். எனவே, இதற்கு நீதி வெண்பா எனப் பெயர் வந்தது. இதனை எழுதியவர் எவர் எனத் தெரிய வில்லை.

**தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்**
**பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வாது—ஆமழல்மற்று**
**எங்கே பிறந்தாலும் எள்ளாரே ; நல்லோர்கள்**
**எங்கே பிறந்தாலும் என் ?** (1)

சொற்பொருள்

தாமரை பொன் முத்து - தாமரைப்பூவும் பொன்னும் முத்தும்
சவரம் கோரோசனை - கவரி மான் மயிரும் கோரோசனை யும்
பால் - பாலும்
பூமரு தேன் - பூவில் பொருந் திய தேனும்
பட்டு புனுகு சவ்வாது-பட்டும் புனுகும் சவ்வாதும்
ஆம் அழல் - எரியும் நெருப்பும்
எங்கே பிறந்தாலும் - எவ் வளவு தாழ்ந்த இடத்தி லிருந்து கிடைத்தாலும்
எள்ளார் - உலக மக்கள் இகழ மாட்டார்கள்
நல்லோர்கள் எங்கே பிறந்தா லும் என்-நல்லவர்கள் எந்தக் குலத்தில்பிறந்தாலும்என்ன குறை (ஒன்றும் இல்லை)

(க - ரை.) நல்லவர்கள் எந்தக் குலத்தில் பிறந்தாலும் உயர்வாகவே மதிக்கப்படுவார்கள்.

**மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்; கடின**
**வன்மொழியி ளுல்இகழும் மண்ணுலகம்;—நன்மொழியை**
**ஓதுகுயில் ஏதங் குதவியது? கர்த்தபந்தான்**
**ஏதபரா தம்செய்த தின்று? (2)**

சொற்பொருள்

நன்மொழியை - நல்ல இனிய இசையை
ஓதுகுயில் - கூவுகின்ற பாராட்டப்படும் குயிலானது
அங்கு ஏது உதவியது - (மக்களுக்கு) எதனை உதவியது
கர்த்தபம் - கழுதையானது
ஏது அபராதம் செய்தது - என்ன குற்றம் செய்தது
இன்று - ஒன்றும் இல்லை
சகம் மென்மதுர வாக்கால் - உலக மக்கள் மென்மையான இனிய சொற்களால்
விரும்பும் - விரும்புவார்கள்
மண்ணுலகம் - உலக மக்கள்
கடின வன்மொழியினுல் இகழும் - கடுமையான கொடிய சொற்களை வெறுப்பார்கள்.

(க - ரை.) உலக மக்கள் குயில் இனிமையாகக் கூவுதலை விரும்பிக் கேட்கின்றனர். கழுதையின் அருவருப்பான குரலை வெறுக்கின்றனர். அதனுல் உலக மக்கள் இனிய சொற்களைப் பேசுபவர்களையே விரும்புவார்கள் என்றும், கொடிய சொற்களைப் பேசுபவர்களை வெறுப்பார்கள் என்றும் அறியலாம்.

**செய்யும் ஒருகருமம் தேர்ந்து புரிவதன்றிச்**
**செய்யின் மனத்தாபம் சேருமே—செய்யஒரு**
**நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்**
**பொற்கொடியைச் சேர்துயரம் போல். (3)**

சொற்பொருள்

செய்யும் - செய்யத்தக்க
ஒரு கருமம் தேர்ந்து - ஒரு வேலையை ஆராய்ந்து
புரிவது அன்றி - செய்வது அல்லாமல்
செய்யின் - ஆராயாமல் செய்வதால்
முன் - முன் காலத்தில்
செய்ய - செம்மையான
ஒரு நல் குடியை - ஒரு நல்ல குழந்தையை
காத்த - காப்பாற்றிய
நகுலனை கொன்ற - கீரிப்பிள்ளையைக் கொலைசெய்த
பொன் மறைக்கொடியை-அழகான பிராமணப் பெண்ணை

சேர் துயரம்போல் - சேர்ந்த துன்பத்தைபோல
மனத்தாபம் - மனவருத்தம்
சேரும் - தம்மை வந்து அடையும்

(க - ரை.) ஆராயாமல் எதைச் செய்தாலும் துன்பமே உண்டாகும்.

## பிராமணப் பெண் கீரியைக் கொன்ற கதை

முன் ஒரு காலத்தில் ஓர் ஊரில் ஒரு பிராமணப் பெண் இருந்தாள். அவளுக்குப் பிள்ளை இல்லை. அவள் ஒரு கீரிப் பிள்ளையை அன்போடு வளர்த்து வந்தாள். சிறிது காலம் கழிந்த பின், அவளுக்கு ஒரு குழந்தை பிறந்தது.

ஒருநாள் அவள் தன் குழந்தையைத் தொட்டிலில் போட்டு விட்டுத் தண்ணீர் கொண்டுவரக் குளத்திற்குச் சென்றாள். கீரிப் பிள்ளையைக் குழந்தைக்குக் காவலாக விட்டுச் சென்றாள்.

அவள் சென்றபின் ஒரு பாம்பு அவ்வீட்டில் நுழைந்து தொட்டில் அருகில் சென்றது. பாம்பைப் பார்த்த கீரிப்பிள்ளை அதைக் கடித்துக் கொன்றது; இரத்தம் வடியும் வாயுடன் வெளியே வந்தது. அவ்வமயம் பிராமணப் பெண் குளத்திலிருந்து திரும்பி வந்தாள்; வீட்டு வாயிற்படியில் கீரியைப் பார்த்தாள்; அதன் வாயில் இரத்தம் இருந்தபடியால், அது தன் குழந்தையைக் கடித்து விட்டிருக்கும் என்று எண்ணினாள்; கோபத்துடன் குடத்தை அதன் தலையில் போட்டுக் கொன்றாள்.

பிறகு, அவள் வீட்டுக்குள் ஓடினாள்; குழந்தை தொட்டிலில் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள்; பக்கத்தில் ஒரு பாம்பு துண்டு துண்டாகக் கடிக்கப்பட்டிருப்பதையும் பார்த்தாள்; தான் ஆராயாமல் செய்த தவறான செயலை எண்ணி ஏங்கிப் பெரும் துன்பம் அடைந்தாள்.

**ஈக்கு விடம்தலையில் எய்தும்; இருந் தேளுக்கு**
**வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே;—நோக்கரிய**
**பைங்கண்அர வுக்குவிடம் பல்லளவே; துர்ச்சனருக்கு**
**அங்கமுழு தும்விடமே ஆம். (4)**

### சொற்பொருள்

ஈக்கு விடம் - ஈ என்னும் பூச்சிக்கு விஷம்
தலையில் எய்தும் - தலையில் இருக்கும்
இருந் தேளுக்கு - பெரிய தேளுக்கு
வாய்த்த விடம் - பொருந்திய விஷம்
கொடுக்கில் வாழும் - கொடுக்கில் இருக்கும்
நோக்க அரிய - பார்க்கப் பயங்கரமான

பைங்கண்-பசுமையான கண் களை உடைய
அரவுக்கு விடம் - பாம்புக்கு விஷம்
பல் அளவே - பல்லில் மட்டுமே இருக்கும்
துர்ச்சனருக்கு - தீய குணம் உடைய கொடியவர்களுக்கு
அங்கம் முழுவதும் - உடம்பு முழுவதும்
விடமே ஆம் - விஷமாகவே இருக்கும்.

(க - ரை.) ஈக்குத் தலையிலும், தேளுக்குக் கொடுக்கிலும், பாம்புக்குப் பல்லிலும் ஆக, ஒவ்வோர் உறுப்பில் மட்டும்தான் விஷம் இருக்கும். ஆனால் கொடியவர்களுக்கோ உடம்பு முழுவதும் விஷமாகவே இருக்கும்.

**கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்**
**கற்பூரம் ஆமோ கடலுப்பு ?—பொற்பூரும்**
**புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்**
**புண்ணியரா வாரோ ? புகல். (5)**

சொற்பொருள்

கடல் உப்பு-கடல் நீரில் உண்டாகும் உப்பு
கற்பூரம்போல - கற்பூரத்தைப் போல
இருந்தாலும் - உருவத்தில் காணப்பட்டாலும்
கடல் உப்பு கற்பூரம் ஆமோ - கடல் உப்பானது கற்பூரம் ஆகுமோ (ஆகாது.)
புல்லியர்தாம் - அற்பர்கள்
பொற்பூரும்புண்ணியரைப் போல - அழகு மிகுந்த புண்ணியவான்களைப் போலவே
இருந்தாலும் - உருவத்தில் ஒத்து இருந்தாலும்
புண்ணியர் ஆவாரோ புகல் - புண்ணியவான்கள் ஆகிவிடுவார்களோ நீ சொல்வாயாக.

(க - ரை.) கடல் உப்பானது கற்பூரத்தைப்போலக் காணப்பட்டாலும், அது கற்பூரம் ஆகாது. அதுபோல, அற்பர்கள் புண்ணியவான்களைப் போலவே உருவத்தில் ஒத்து இருந்தாலும் புண்ணியவான்கள் ஆகமாட்டார்கள்.

**சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ; ஆன்றமைந்த**
**முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே ; வெற்றிபெறும்**
**வெண்கலத்தின் ஓசை மிகுமே ; விரிபசும்பொன்**
**ஒண்கலத்தில் உண்டோ ஒலி ? (6)**

சொற்பொருள்

வெற்றிபெறும் வெண் கலத்தின் ஓசை - சிறந்த வெண் கலத்திலிருந்து உண்டாகும் ஓசை

மிகும் - மிகுதியாக இருக்கும்
விரிபசும்பொன் - ஒளி வீசும் தங்கத்தால் ஆகிய
ஒண்கலத்தில்ஒலி உண்டோ- ஒளிமிகுந்த பாண்டத்தில் ஓசை உண்டாகுமோ (உண் டாகாது)
சிற்றுணர்வோர் - குறைந்த அறிவு உடையவர்
என்றும் சிலுசிலுப்பர்-எப்போதும் படபடத்துப் பேசுவர்
ஆன்று அமைந்த - அறிவில் சிறந்து அடக்கமான
முற்றுணர்வோர் - முதிர்ந்த அறிவு உடையவர்
ஒன்றும் - ஒரு வார்த்தையும் அதிகமாக
மொழியார் - பேசமாட்டார்.

(க - ரை.) வெண்கலத்தில் ஓசை மிகுதியாக இருக்கும். தங்கத்தில் ஓசை உண்டாகாது. அதுபோலக் குறைந்த அறிவுடையவர்கள் எப்போதும் படபடப்பாகப் பேசுவார்கள். முதிர்ந்த அறிவு உடையவர்கள் அவ்வாறு ஒன்றும் பேசமாட்டார்கள்.

**மந்திரமும், தேவும், மருந்தும், குருவருளும்,**
**தந்திரமும், ஞானந் தருமுரையும்,—யந்திரமும்**
**மெய்யென்னின் மெய்யாய் விளங்குமே மேதினியில்**
**பொய்யென்னின் பொய்யாகிப் போம். (7)**

சொற்பொருள்

மேதினியில் - இந்த உலகத்தில்
மந்திரமும் தேவும் - மந்திரங்களும் கடவுளும்
மருந்தும் - மருந்துகளும்
குரு அருளும் - ஆசிரியரின் கருணையும்
தந்திரமும் - சாத்திரங்களும்
ஞானம் தரும் - அறிவைக் கொடுக்கும்
உரையும் - உபதேசமொழியும்
யந்திரமும் - மந்திரச் சக்கரம் வரைந்த தகடுகளும்
மெய் என்னின் - மெய் என்று நம்பினுல்
மெய்யாய் விளங்கும் - மெய்யாகவே பலன் தரும்
பொய் என்னின்-பொய் என்று நினைத்தால்
பொய் ஆகிப்போம் - பொய் ஆகிவிடும்.

(க - ரை.) மந்திரம், கடவுள், சாத்திரம் முதலியவைகளை நம்பினுல்தான் பலன் உண்டு. நம்பாவிட்டால் பலன் இராது.

**பொன்னும், கரும்பும், புகழ்பாலும், சந்தனமும்,**
**சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த**
**நற்குணமே தோன்றும் ; நலிந்தாலும் உத்தமர்பால்**
**நற்குணமே தோன்றும் நயந்து. (8)**

### சொற்பொருள்

**புகழ்** - எல்லாராலும் புகழப்படுகின்ற
**பொன்னும் கரும்பும்** - பொன்னையும் கரும்பையும்
**பாலும் சந்தனமும்** - பாலையும் சந்தனக் கட்டையையும்
**சின்னம்பட** - உருவம் அழியும்படி
**வருத்தம் செய்தாலும்** - துன்பம் செய்தாலும்
**முன் இருந்த நற்குணமே தோன்றும்** - முதலில் இருந்த நல்ல குணங்களே காணும்
**நலிந்தாலும்** - (அதுபோல) துன்பம் அடைந்தாலும்
**உத்தமர்பால்** - நல்லவர்களிடத்தில்
**நற்குணமே**-நல்ல குணங்களே
**நயந்து தோன்றும்** - சிறந்து காணப்படும்.

**(க - ரை.)** பொன், கரும்பு, பால், சந்தனக்கட்டை ஆகியவற்றை உருவம் அழியும்படி அழித்தாலும், முன் இருந்த நல்ல குணங்களே அவற்றினிடம் காணப்படும். அதுபோல நல்லவர் துன்பம் அடைந்தாலும் அவரிடத்தில் நல்ல குணங்களே சிறந்து காணப்படும்.

**உத்தமர்தாம் ஈயுமிடத்து ஓங்குபனை போல்வரே ;**
**மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே ; முத்தலரும்**
**ஆங்கமுகு போல்வர் அதமர் ; அவர்களே**
**தேங்கதலி யும்போல்வர் தேர்ந்து. (9)**

### சொற்பொருள்

**தேர்ந்து** - குறிப்பறிந்து
**ஈயும் இடத்து** - கொடுக்கும் செயலில்
**உத்தமர் தாம் ஓங்குபனை போல்வர்** - உத்தமர் உயர்ந்த பனைமரம் போல இருப்பர்
**மத்திமர்** - நடுத்தரமானவர்
**தெங்குதனை மானுவர்** - தென்னை மரத்தை ஒத்திருப்பர்
**அதமர்** - கீழானவர்
**முத்து அலரும்** - முத்துப் போன்ற அரும்புவிடும்
**கமுகுபோல்வர்** - பாக்கு மரத்துக்கு ஒப்பாவார்
**அவர்களே** - அக்கீழானவரே
**தேம் கதலியும் போல்வர்** - இனிய பழங்களைத் தருகின்ற வாழை மரத்துக்கும் ஒப்பாவார்கள்.

**(க - ரை.)** குறிப்பறிந்து கொடுக்கும் செயலில் உத்தமர் உயர்ந்த பனை மரத்தைப்போல இருப்பர். நடுத்தரமானவர் தென்னை மரத்தை ஒத்திருப்பர். கீழானவர் பாக்கு மரத்துக்கும் வாழை மரத்துக்கும் ஒப்பாவர்.

**விளக்கம் :** வேலி அமைத்து நீர் பாய்ச்சி வளர்க்கப்படாத பனை மரமானது நுங்கு, பழம், கிழங்கு, ஓலை முதலியவற்றைக் கொடுத்து உதவுவதால், முன் தமக்கு உதவாதவர்க்கும் உதவுகின்ற உயர்ந்த மக்களுக்கு உவமை ஆயிற்று.

தென்னை மரம் நீர் பாய்ச்சிச் சிலகாலம் வளர்த்த பிறகே பலன் தருவதால், முதலில் தமக்கு உதவியவர்களுக்கு, அவர் செய்த அளவே உதவுகின்ற நடுத்தர மக்களுக்கு உவமை ஆயிற்று.

பாக்கு மரமும், வாழை மரமும் நீண்டகாலம் நீர் பாய்ச்சிப் பாதுகாத்த பின்னரே சிறிய அளவுக்குப் பயன் தருவதால், முதலில் மிகுந்த உதவிசெய்துவிட்டுக் கேட்டாலும் மிகச் சிறு அளவே உதவி செய்யும் கீழான மக்களுக்கு உவமை ஆயின.

**கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும், நூல்**
**வல்லான் ஒருவனையே மானுவரோ ?—அல்லாரும்**
**எண்ணிலா வான்மீன் இலகிடினும், வானகத்தோர்**
**வெண்ணிலா ஆமோ ? விளம்பு. (10)**

சொற்பொருள்

**வானகத்து** - வானத்திலே
**அல்ஆரும்** - இரவில் பொருந்தியுள்ள
**எண் இலா வான்மீன்** - கணக்கற்ற நட்சத்திரங்கள்
**இலகிடினும்** - ஒளி வீசினுலும்
**ஓர் வெண்ணிலா ஆமோ**-ஒரு வெண்மையான சந்திரனுக்கு ஒப்பாகுமோ ? (அதுபோல)
**கல்லார் பலர் கூடி** - படியாதவர் பலர் சேர்ந்து
**காதலித்து வாழினும்** - ஒருவரை ஒருவர் விரும்பி வாழ்ந்தாலும்
**நூல் வல்லான் ஒருவனை மானுவாரோ** - நல்ல நூல்களைக் கற்ற ஒரு புலவனை ஒப்பரோ
**விளம்பு** - நீ சொல்வாயாக.

(க - ரை.) வானத்திலே இரவில் கணக்கற்ற நட்சத்திரங்கள் ஒளி வீசினுலும் ஒரு சந்திரனுக்கு ஒப்பாக முடியாது. அதுபோல, படியாத மூடர் பலர் சேர்ந்து வாழ்ந்தாலும் கற்றறிந்த ஒரு புலவனுக்கு ஒப்பாகார்.

வினு-விடை

**1. நீதி வெண்பா—பெயர்க் காரணம் என்ன ?**

இது நீதியைக் கூறும் வெண்பாக்களால் ஆகிய நூல் ஆதலின் நீதி வெண்பா என்னும் பெயர் பெற்றது.

**2. நல்லவர்கள் எங்கே பிறந்தாலும் சிறப்பாக மதிக்கப்படுவர் என்பதை விளக்கு.**

தாமரை, பொன், முத்து, சாமரம், கோரோசனை, பால், தேன், பட்டு, புனுகு, சவ்வாது, நெருப்பு ஆகியவை எங்கே தோன்றினுலும் உலக மக்கள் அவற்றைச் சிறப்பாக மதிப்பார்கள். அதுபோல நல்லவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தாலும் சிறப்பாகவே மதிக்கப்படுவார்கள்.

**3. குயில், கழுதை—இவற்றைக்கொண்டு அறிவிக்கப்படுபவை என்ன ?**

குயில் கூவுவதை உலக மக்கள் விரும்பிக் கேட்கிறுர்கள்; கழுதையின் குரலை வெறுக்கின்றுர்கள். அதனுல், உலக மக்கள் இனிமையாகப் பேசுபவர்களையே விரும்புவார்கள் என்பதையும், கடுமையாகப் பேசுபவர்களை வெறுப்பார்கள் என்பதையும் அறியலாம்.

**4. ஆராயாது செய்பவர் அடையும் துன்பம் என்ன ?**

ஒன்றை ஆராயாமல் ஒருவன் செய்வானுயின், முன் ஒரு காலத்தில் தன் குழந்தையைக் காப்பாற்றிய கீரிப் பிள்ளையைக் கொன்ற பிராமணப் பெண்ணைப்போல் மனவருத்தம் அடைவான்.

**5. துர்ச்சனரைப் பற்றி என்ன கூறப்பட்டுள்ளது ?**

ஈக்குத் தலையிலும், தேளுக்குக் கொடுக்கிலும், பாம்புக்குப் பல்லிலும் ஆக ஒவ்வோர் உறுப்பில் மட்டுமே விஷம் இருக்கிறது. ஆனுல், துர்ச்சனராகிய கொடியவருக்கோ உடம்பு முழுவதும் விஷமாகவே இருக்கும்.

**6. உப்பும், கற்பூரமும் ஏன் கூறப்பட்டிருக்கின்றன?**

கடல் உப்பு தோற்றத்தால் கற்பூரம்போல இருந்தாலும் குணத்தால் கற்பூரம் ஆகாது. அதுபோல் கீழ் மக்கள் தோற்றத்தால் புண்ணியவான்களைப்போல இருந்தாலும், குணத்தால் புண்ணியவான்கள் ஆகார்.

**7. சிற்றுணர்வோர், முற்றுணர்வோர் யாவர் ?**

வெண்கலத்தில் ஓசை மிகுதியாக இருக்கும். ஆனுல், தங்கத்தில் ஒலி உண்டாகாது. அதுபோல் சிற்றுணர்வோர் எப்போதும் சிடுசிடுத்துப் பேசுவார்கள். முற்றுணர்வோர் அப்படிப் பேசாமல் அமைதியாக இருப்பார்கள்.

**8. எவற்றை நம்பினுல் பயன் உண்டு ?**

மந்திரம், கடவுள், மருந்து, ஆசிரியர், கருணை, சாத்திரம், உபதேச மொழி, யந்திரத் தகடு முதலியவற்றை மெய் என்று நம்பினுல் பயன் உண்டாகும். பொய் என்று நினைத்தால் பயன் உண்டாகாது.

**9. உத்தமரின் சிறந்த குணம் யாது ?**

பொன், கரும்பு, பால், சந்தனக்கட்டை ஆகியவற்றை உருவம் மாறும்படி சிதைத்தாலும், அவற்றுக்கு முன்

பிருந்த நல்ல குணமே விளங்கித் தோன்றும். அவை போல, எவ்வளவு வருத்திறைலும் உத்தமரிடம் நல்ல குணமே சிறந்து காணப்படும்.

**10. உத்தமர், நடுத்தரமானவர், கீழானவர் ஆகியோர் எவை போன்றவர் ?**

பாதுகாத்து வளர்க்காமலிருந்தும் பனே மரம் பயன் தருவதுபோல, உத்தமர் தமக்கு உதவி செய்யாதவர்களுக்கும் தம்மாலான உதவியைச் செய்வர். சிறிது காலம் வளர்த்தபின், நீண்ட காலம் கழித்துப் பயன் தரும் தென்னே மரம்போல, நடுத்தரமானவர் முன்ஞல் உதவி செய்தவர்களுக்குப் பின் சிறிது உதவி செய்வர். நீர் பாய்ச்சிக்கொண்டே இருந்தால் பாக்கு மரம் பயன் தரும். பலகாலம் நீர் பாய்ச்சி வந்தால் ஒரே முறை வாழை மரம் பலன் தரும். இவற்றைப்போலக் கீழ்மக்கள் தமக்குப் பல நாள் உதவி புரிந்தவர்களுக்கும், உதவி புரிந்து கொண்டே இருப்பவர்களுக்கும்தான் சிறிது உதவி செய்வர்.

**11. கற்றவர் பெருமை யாது ?**

இரவில் வானத்தில் பொருந்தியுள்ள கணக்கற்ற நட்சத்திரங்கள் ஒளி வீசினுலும், அவை ஒரு வெண்ணிலாவுக்கு ஒப்பாக மாட்டா. அதுபோலக் கற்றறியா மூடர் பலர் கூடி வாழ்ந்தாலும், அவர்கள் நல்ல நூல்களைக் கற்றுவல்ல ஒரு புலவனுக்கு ஒப்பாகமாட்டார்கள்.

## III. சதகச் செய்யுள்

சதகம் என்பது நூறு செய்யுள்கள் அடங்கிய நூல் எனப் பொருள்படும். இங்குப் பாடமாக வந்துள்ள செய்யுள் குமரேச சதகம் என்னும் நூலில் இருக்கிறது. இந் நூல், திருப்புல்வயல் என்னும் ஊரில் மலேமீது உள்ள குமரக்கடவுள் மேல் பாடப்பட்ட 100 செய்யுள்கள் அடங்கியது. இதன் ஆசிரியர் பெயர் குருபாத தாசர். இவர் ஊர் புதுக்கோட்டையைச் சேர்ந்த திருப்புல்வயல். இவர் 150 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்.

### 1. தந்தை போல்வார்

**தவமதுசெய் தேபெற்றெ டுத்தவன் முதற்பிதா ;**<br>
**தனேவளர்த் தவன்ஒருபிதா ;**<br>
**தயையாக வித்தையைச் சாற்றினவன் ஒருபிதா ;**<br>
**சார்ந்தசற் குருவொருபிதா ;**

அவமறுத் தாள்கின்ற அரசொருபி தா ; நல்ல
ஆபத்து வேளைதன்னில்
'அஞ்சல் ?' என் றுற்றதுயர் தீர்த்துளோன் ஒருபிதா ;
அன்புள முன்னோன்ஒருபிதா ;
கவளம்இடு மனைவியைப் பெற்றுளோன் ஒருபிதா ;
கலிதவிர்த் தவன்ஒருபிதா ;
காசினியில் இவரைநித் தம்பிதா என்றுளம்
கருதுவது நீதியாகும் ;
மவுலிதனில் மதியரவு புனைவிமலர் உதவுசிறு
மதலையென வருகுருபரா !
மயில்ஏறி விளையாடு குகனே! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே !

சொற்பொருள்

மவுலிதனில் - தலைமுடியில்
மதி அரவு - சந்திரனையும் பாம்பையும்
புனை விமலர் - அணிந்த சிவ பெருமான்
உதவு சிறு மதலை என-பெற்ற சிறிய பிள்ளை ஆக
வரு குருபரா - தோன்றிய சிறந்த குருவே
மயில் ஏறி - மயிலின்மீது ஏறிக் கொண்டு
விளையாடும் குகனே - விளையாடுகின்ற முருகனே
புல்வயல் - திருப்புல்வயல் என்னும் ஊரில் உள்ள
நீடு மலை மேவு - பெரிய மலை மீது பொருந்தி உள்ள
குமரேசனே - முருகப் பெருமானே
தவமது செய்தே - சிறந்த தவம் செய்து
பெற்றெடுத்தவன் - பெற்றவன்
முதற்பிதா - முதல் தந்தை
தனை வளர்த்தவன் - தன்னை வளர்த்தவன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
தயையாக வித்தையைச் சாற்றினவன் - அன்போடு கல்வியைக் கற்பித்தவன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
சார்ந்த சற்குரு - ஞானம் உபதேசிக்கும் ஆசிரியன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
அவம் அறுத்து - தீமைகளைப் போக்கி
ஆள்கின்ற அரசு - அரசு ஆளும் அரசன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
நல்ல ஆபத்து வேளை தன்னில் - மிகுந்த துன்பம் உண்டானபோது
அஞ்சல் என்று - பயப்படாதே என்று [பத்தை
உற்ற துயர் - உண்டான துன்
தீர்த்துளோன் - போக்கியவன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
அன்புள முன்னோன் - அன்புடைய அண்ணன்
ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான்
கவளம் இடு மனைவியை பெற்றுளோன் - சோறு இடுகின்ற மனைவியைப் பெற்றவன்

| | |
|---|---|
| ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான் | நித்தம் பிதா என்று - நாள் தோறும் தந்தை என்று |
| கலி தவிர்த்தவன் - வறுமையைப் போக்கியவன் | உளம் கருதுவது - மனத்தில் நினைத்து நடப்பது |
| ஒரு பிதா-ஒரு தந்தை ஆவான் | நீதி ஆகும் - நியாயம் ஆகும். |
| காசினியில் இவரை - உலகில் இவர்களை | |

வினா-விடை

**தந்தைக்குச் சமமானவர்கள் பெயர்களை எழுது.**

தன்னை வளர்ப்பவர், ஆசிரியர், ஞானகுரு, அரசர், ஆபத்தில் உதவியவர், அண்ணன், மனைவியைப் பெற்ற மாமனார், வறுமையைப் போக்கியவர் ஆகியவர்கள் பெற்ற தந்தைக்குச் சமமானவர்.

## 2. கடவுள் ஒருவரே

இச்செய்யுள் எம்பிரான் சதகம் என்னும் நூலில் இருக்கிறது. இந்நூல் எம்பிரானைப்பற்றிப் பாடப்பட்ட 100 செய்யுள்கள் அடங்கியது. ஆகையால் எம்பிரான் சதகம் என்னும் பெயர் பெற்றது. இந்நூலை எழுதியவர் கோபால கிருஷ்ண பாரதியார்.

**பண்ணியிடும் பணிபலவே பொன்ஒன் றேயாம் ;**
**பாண்டத்தின் பேர்பலவே, மண்ஒன் றேயாம் ;**
**வண்ணமிகும் பசுப்பலவே பால்ஒன் றேயாம் ;**
**வகைஏழின் உடல்பலவே சீவன் ஒன்றும் ;**
**நண்ணும்அறு சமயங்கள் பேர்வே றல்லால்**
**நாதன்நீ ஒருவனே அவர்கள் தம்மை**
**எண்ணியே செயுந்தொண்டர் இச்சைக் கெல்லாம்**
**இரங்கிவரம் தருகின்றாய் எம்பி ரானே !**

சொற்பொருள்

| | |
|---|---|
| எம்பிரானே - எம் தலைவனாகிய கடவுளே | பாண்டத்தின் - பாத்திரங்களின் |
| பண்ணி இடும் - செய்து அணிகின்ற | பேர் பலவே - பெயர்கள் பலவாகும் |
| பணி பலவே - நகைகள் பல ஆனாலும் | மண் ஒன்றே ஆம்-அவற்றைச் செய்யப் பயன்படும் மண் ஒன்றே ஆகும் |
| பொன் ஒன்றே ஆம் - அவற்றைச் செய்யப் பயன்படும் பொன் ஒன்றே ஆகும் | வண்ணம் மிகும் - நிறங்கள் மிகுந்த |

**பசு பலவே** - பசுமாடுகள் பல ஆகும்
**பால் ஒன்றே ஆம்** - பால் ஒரே வகை ஆகும்
**வகை ஏழின்** - ஏழு வகையான (பிறவிகளில்)
**உடல் பலவே சீவன் ஒன்றும்**- உடல் அமைப்புப் பல ஆகும் அவைகளின் உயிர் ஒன்றே ஆகும்
**நண்ணும்** - பொருந்துகின்ற
**அறு சமயங்கள்** - ஆறு வகை மதங்களும்
**பேர் வேறு அல்லால்** - பெயர் வேறு வேருனவை ஆனுலும்
**நாதன் நீ ஒருவனே** - அவைகளின் தலைவனுகிய கடவுள் நீ ஒருவனே ஆகும்
**அவர்கள் தம்மை எண்ணி** - அந்த ஆறுவகை மதங்களைச் சேர்ந்தவர்களும் தங்களை நினைத்து
**செய்யும் தொண்டர்** - அன்பு செலுத்துகின்ற அடியவர்களுடைய
**இச்சைக்கு எல்லாம்** - விருப்பத்துக்கு எல்லாம்
**இரங்கி** - மனம் இரங்கி
**வரம் தருகின்ருய்** - (நீ) வரம் கொடுக்கின்ருய்.

### விஞ-விடை

**1. கடவுள் ஒருவரே என்பதைத் தகுந்த காரணங்களைக் கூறி விளக்கு.**

செய்யும் நகைகள் பலவானுலும் அவற்றைச் செய்யும் பொன் ஒன்றே. பாத்திரங்கள் பலவானுலும் அவற்றைச் செய்யும் மண் ஒன்றே. பசுக்கள் பல நிறங்களாக இருந்தாலும், அவற்றின் பால் வெண்மை நிறமே. ஏழு வகைப் பிறவிகளில் உடல் பலவாக இருந்தாலும், அவற்றின் உயிர் ஒன்றே. சமயங்கள் ஆறு வகையாக இருந்தாலும் அவற்றின் தலைவனுகிய கடவுள் ஒருவரே.

**2. ஏழு பிறவிகள் எவை ?**

தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள் என்பவை ஏழுவகையான பிறவிகள் ஆகும்.

## IV. தேசிங்கு ராஜன் கதை

(இப்பாடப் பகுதிக்குச் சொற்பொருள் தேவைப்படாததால், விஞ-விடை மட்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது.)

### விஞ-விடை

**1. தேசிங்கு ராஜன் யார் ?**

தேசிங்கு ராஜன் செஞ்சிக் கோட்டையை ஆட்சி புரிந்த சிற்றரசன். செஞ்சிக்கோட்டை தென் ஆர்க்காடு மாவட்டத்தில் இருக்கிறது.

**2. தேசிங்கு டில்லி சென்றது ஏன்?**

டில்லி பாதுஷாவிடம் பாராசாரி என்னும் முரட்டுக் குதிரை ஒன்று இருந்தது. அதை அடக்குபவருக்குப் பரிசு என்றும், அடக்க முடியாதவர் சிறையில் இடப்படு வர் என்றும் பாதுஷா அறிவித்திருந்தார். தேசிங்குவின் தந்தை தேரணி சிங்கும், சிறிய தந்தை தரணி சிங்கும் அதை அடக்க முடியாமல் சிறையில் இருந்தனர். அந்தக் குதிரையை அடக்கி, அவர்களை மீட்டு வருவதற் காகவே தேசிங்கு டில்லி சென்றான்.

**3. தேசிங்கு மோவுத்துக்காரனிடம் கூறியது என்ன?**

"டில்லி பாதுஷாவிடம் தெய்வலோகக் குதிரை ஒன்று இருக்கிறதாம். என் தந்தை தேரணிராசன் டில்லி யில் இருக்கிறார். அந்தக் குதிரையை அடக்கி அவரை அழைத்துக் கொண்டு வரவேண்டும். விரைவாகப் புறப் படு," என்று தேசிங்கு மோவுத்துக்காரனிடம் கூறினான்.

**4. மோவுத்துக்காரன் என்ன செய்தான்?**

மோவுத்துக்காரன் குதிரைக் கொட்டிலுக்குச் சென் றான்; இரண்டு குதிரைகளைக் கொண்டு வந்தான்; வழிச் செலவுக்கு இலட்சம் பொன்னை மடியில் கட்டிக் கொண்டான்; தேசிங்குக்கு முன்னால் விரைவாகக் கொண்டுவந்து குதிரைகளை நிறுத்தினான்.

**5. இருவரும் டில்லிக்கு எவ்வாறு சென்றனர்?**

தேசிங்கு அரிஅரி என்று கூறியபடி ஒரு குதிரைமீது ஏறினான். மற்றொன்றின்மீது மோவுத்துக்காரன் ஏறிக் கொண்டான். வெள்ளிச் சவுக்கினால் குதிரைகளை அடித் தார்கள். ஐந்து நாள் செல்ல வேண்டிய தூரத்தை அவை ஒரே நாளில் கடந்தன. இவ்வாறு பத்தே நாட்களில் அவர்கள் டில்லியை அடைந்தனர். இருவரும் டில்லி தெருவில் நடந்து சென்றார். தேசிங்கு சிங்கக் குட்டி போல டில்லி பாதுஷாவின் சிங்கார மால் போய்ச் சேர்ந்தான்.

**6. கொலு மண்டபக் காட்சியை விளக்கு.**

தேசிங்கு சிங்கம்போல் கர்ச்சித்தபடி கொலு மண்ட பத்தில் வந்து நின்றான். அப்போது பாதுஷா தங்கச் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றிப் பிரபுக்கள் பலர் இருந்தார்கள். மந்திரிகள் நடுவில் உட் கார்ந்திருந்தார்கள். ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் அங்கு இருந்தார்கள். சிறைப்பட்ட அரசர்களும் அங்கு

இருந்தார்கள். அவர்களுடன் தரணி சிங்கும் தேரணி சிங்கும் இருந்தார்கள். தேசிங்கு அங்கே கோடி சூரியர் கள் ஒரே இடத்தில் தோன்றியதுபோல ஒளியுடன் தோன்றினுன்.

**7. பாதுஷாவிடம் தேசிங்கு கேட்டது என்ன ?**

"சலாம் ஐயா ! உம்மிடம் பாராசாரி என்ற குதிரை இருக்கிறதாம். அந்தக் குதிரைமேல் ஏறிச் சவாரி செய் வதற்காக நான் இங்கு வந்தேன். சவாரி செய்துவிட்டு நான் திரும்பவேண்டும்," என்று தேசிங்கு பாதுஷா விடம் கேட்டான்.

**8. டில்லி பாதுஷா தேசிங்கிடம் என்ன கேட்டார் ?**

டில்லி பாதுஷா தேசிங்கைப் பார்த்து, "அறியாத பாலகனே ! நீ எந்த நாட்டிலிருந்து இங்கு வந்தாய்? உன் பெயர் என்ன ? ஊர் எது ? தகப்பன் பெயர் என்ன ? தாயின் பெயர் என்ன ? விரைவாகச் சொல்," என்று கேட்டார்.

**9. பாதுஷாவிற்குத் தேசிங்கு கூறிய விடை யாது ?**

"ஐயா, தெற்கே இருக்கும் செஞ்சிக் கோட்டை என் ஊர். அதை ஆளும் அரசர் தேரணி மன்னர். நான் அவருடைய மகன். என் பெயர் தேசிங்கு. என் சிறிய தந்தை தரணி சிங்கும், தந்தை தேரணி சிங்கும் பாரா சாரிக் குதிரைமீது ஏறிச் சவாரி செய்ய முடியாமல் சிறையில் இருக்கிருர்கள். எனக்கு உத்தரவு கொடுங்கள். அந்தக் குதிரையை அடக்கி, நான் அவர்களை மீட்டு அழைத்துக் கொண்டு போக வந்திருக்கிறேன்," என்று தேசிங்கு பாதுஷாவிடம் கூறினுன்.

(**குறிப்பு :** தேசிங்கு-தேஜஸ்சிங் என்னும் பெயரின் சிதைவு. மோவுத்துக்காரன்-மகமதுகான் என்னும் பெய ரின் சிதைவு.)

## V. வீரபாண்டியக் கட்டபொம்மன்

வீரபாண்டியக் கட்டபொம்மன், இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள பாஞ்சாலங்குறிச்சி என்னும் சிற்றூரை ஆண்டுவந்தான். பதினேழாம் நூற்றுண்டில் இருந்த இவன் எவருக்கும் அஞ்சாத தீரன். இவன் தென்னிந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்துச் சுதந்தரப் போர் முழக்கம் செய்த வீரன். இவனை ஆங்கிலேயர் சிறைப்பிடித்து வஞ்சனையாகக் கொன்றனர்.

இவனது வரலாற்றுப் பாடல்களைப் பாடியவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. இவர் பிறந்த ஊர் சுசீந்திரத்துக்கு

அருகில் உள்ள தேரூர். இவர் தந்தை சிவதாணுப் பிள்ளை. தாயார் ஆதிலட்சுமி அம்மாள். இவர் 1876ஆம் ஆண்டில் பிறந்து 1954ஆம் ஆண்டில் மறைந்தார்.

[இப்பாடப் பகுதிக்குச் சொற்பொருள் தேவைப்படாததால் வினா-விடை மட்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

## வினா-விடை

**1. கவிமணி 'பாடுவோம் வா' என்று கூறுவது ஏன்?**

ஆங்கிலேயரைப் பார்த்து, "மீசையை முறுக்கிக் கொண்டு எங்களை எதிர்த்த ஆங்கிலேயரே, உங்களுக்கு வரிப்பணமாக நான் ஒரு காசும் தரமாட்டேன்" என்று முழக்கம் செய்த சிங்கம் போன்ற வீரனாகிய பாஞ்சாலங் குறிச்சி மன்னன் வீரபாண்டியனின் பெருமைகளை நாம் வாஞ்சையோடு பாடுவோம் வா மனமே!" என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கூறியுள்ளார்.

**2. வீரபாண்டியரின் குணங்கள் யாவை?**

வீரபாண்டியன் திருச்செந்தூர் முருகப் பெருமானை நாள்தோறும் வணங்கி வந்தான். அவன் எவருக்கும் அஞ்சாத சிங்கம் போன்றவன்; தன்னிடம் அடைக்கலம் புகுந்தவரை ஆதரித்துக் காப்பவன்; கெஞ்சி வாழும் அடிமை வாழ்வை அடியோடு வெறுத்தவன்; மானத்தை உயிரினும் மேலானதாக மதித்தவன்; அன்றாடம் தன் கடமைகளை ஆராய்ந்து தவறாமல் செய்தவன்; அறங்கள் பலவற்றைச் செய்தவன்.

**3. வரி கேட்ட வெள்ளையருக்கு வீரபாண்டியன் கூறிய பதில் யாது?**

"தானம் வேண்டுமானாலும், தருமம் வேண்டுமானாலும் கொடுக்கிறேன். வானம் மழை பொழிகிறது. பூமி விளைகிறது. உங்களுக்கு எதற்காக வரி கட்டவேண்டும்?" என்று வீரபாண்டியக் கட்டபொம்மன் வெள்ளையரைப் பார்த்துக் கூறினான்.

**4. பாஞ்சைப் பதியின் வீரம் எத்தகையது?**

"பாஞ்சாலங்குறிச்சி மண்ணில் பிறந்த முயலும் நாய்மீது பாய்ந்து விரட்டும்" என்பதும், "கட்ட பொம்மன் சீமையிலே காகம் பறவாது" என்பதும் பாஞ்சைப் பதியின் வீரத்தை எடுத்துக் காட்டுகின்றன.

**5. விசயன், வீமன் என்ற பாரதப் பெயர்கள் வரக் காரணம் என்ன?**

வீரபாண்டியக் கட்டபொம்மனின் தம்பி ஊமைத் துரை விசயனைப் போன்றவன் என்றும், வீரபாண்டியக்

கட்டபொம்மன் வீமனைப் போன்றவன் என்றும் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கூறியுள்ளார்.

**6. வீரபாண்டியனுடைய புகழ் விளங்கச் செய்ய வேண்டுபவை யாவை ?**

வீரபாண்டியக் கட்டபொம்மனுடைய புகழ் விளங்கும்படி அன்ன சத்திரங்கள், ஆலயங்கள், கலைக்கழகங்கள் முதலியவற்றை அமைக்கவேண்டும். பாஞ்சாலங் குறிச்சி நகரத்தைக் குபேரனின் தலைநகராகிய அளகாபுரியைப் போலச் செல்வச் சிறப்புடனும், அழகுடனும் விளங்குமாறு செய்யவேண்டும்.

**7. வீரர்கள் மிகுந்த வீரம் பெறுவதற்கு உரிய மந்திரம் யாது ?**

வீரர்கள் மிகுந்த வீரம் பெறுவதற்குரிய சிறந்த மந்திரம் வீரபாண்டியக் கட்டபொம்மனின் பெயரே ஆகும்.

நேரம் : $1\frac{1}{2}$ மணி] **மாதிரி வினாத்தாள்** [மதிப்பெண் : 100

1\. (அ) கண்ணுக்கும் கல்விக்கும் உள்ள வேறுபாடு யாது? அல்லது செல்வப் பொருளைவிடக் கல்விப் பொருளே சிறந்தது என்பதற்குக் காரணம் என்ன ?

(ஆ) சிந்துபாது கிழவனிடமிருந்து எப்படித் தப்பினான் ?

(இ) நரி தன் வாலை இழந்ததற்கு என்ன காரணம் கூறிற்று ? அல்லது தாஜ்மஹால் கட்டப்பட்டதற்குக் காரணம் என்ன ?

(ஈ) நாம் நல்வாழ்வு வாழ எவற்றைப் பின்பற்றி நடக்கவேண்டும் ?

(உ) மைதாஸுக்குத் தெய்வம் தந்த வரத்தால் என்ன விளைந்தது ? அல்லது ஆண்மயிலுக்கும் பெண் மயிலுக்கும் உள்ள வேறுபாடு யாது ?

(ஊ) ஆஷாடபூதி தேவசன்மாவை ஏமாற்ற என்ன செய்தான் ? அல்லது வணிகர்கள் வழக்கில் நீதி மன்றத்தலைவர் கூறிய தீர்ப்பு யாது ? $3 \times 6 = 18$

2\. (அ) குரங்கு ஆண்முதலையை எப்படி ஏமாற்றியது ? அல்லது நல்லானுக்கு ஏற்பட்ட இடையூறு யாது ?

(ஆ) காகம் ஆமையை விடுவிக்கச் செய்த உபாயம் யாது ?

(இ) பாரதியார் கூறியுள்ள கைத்தொழில்கள் யாவை? அல்லது பொன்னப்பர் வழக்கில் ஊர்த்தலைவர் கூறிய தீர்ப்பு யாது ?

(ஈ) நிலக்கரியின் உபயோகங்கள் யாவை? அல்லது காஞ்சீபுரம் சிறந்த நகரம் என்பதற்குக் காரணம் என்ன?

(உ) நாமே நமக்குத் துணையானல் உண்டாகும் நன்மைகள் யாவை? அல்லது எஸ்கிமோக்கள் வீடு எதனல் கட்டப்பட்டது? அதன் வடிவம் யாது?

(ஊ) குந்தி கன்னனிடம் வேண்டிய வரங்கள் யாவை? அல்லது காந்தியடிகள் வகுப்பிற்கு ஆய்வாளர் வந்தபோது நிழ்ந்தது யாது? $3 \times 6 = 18$

3. (அ) 'ஒன்றை நினைக்கின்' எனத் தொடங்கும் பாட்டைப் பாடப் புத்தகத்தில் உள்ளபடி எழுது.

(ஆ) நல்ல குடியில் பிறந்தவர்கள் தன்மை என்ன?

(இ) செல்வம் எப்படிப்பட்டது?

(ஈ) துர்ச்சனரைப் பற்றி என்ன கூறப்பட்டுள்ளது?

(உ) உத்தமர், நடுத்தரமானவர், கீழானவர் ஆகியோர் எவை போன்றவர்?

(ஊ) கடவுள் ஒருவரே என்பதைக் காரணத்துடன் விளக்குக.

(எ) தேசிங்கு டில்லிக்குச் சென்றது ஏன்?

(ஏ) வீரபாண்டியரின் குணங்கள் யாவை? $4 \times 8 = 32$

4. (அ) சினைப் பெயர் என்பது யாது?

(ஆ) காலப் பெயருக்கு மூன்று சான்றுகள் எழுது.

(இ) உயர்திணை, அஃறிணைகளுக்கு உரிய பால்கள் எவை?

(ஈ) நான் நன்ருகப் படித்தேன்—எழுவாய் பயனிலைகளை எடுத்து எழுது.

(உ) வள்ளி, ஆடு, கந்தன், நடந்தது, பாடினர்கள், ஓடுகின்றன—இவை என்ன பால்கள்? $3 \times 5 = 15$

5. (அ) கடினம், புகழ்வர், உடையவர், சிறப்பு—எதிர்ச் சொற்கள் எழுது. 2

(ஆ) காக்ஷி, ஆக்ஷி, நிறப்பி, மாக்ஷி—திருத்தி எழுது. 2

(இ) இரந்து - இறந்து, அரியாமல் - அறியாமல் இவற்றை வாக்கியங்களில் அமைத்து எழுது. 4

(ஈ) பறை, கன்னம், அலகு, திக்கு—ஒவ்வொன்றுக்கும் இரண்டு இரண்டு பொருள் எழுது. 4

(உ) உன் தந்தைக்கு உன் நலம் பற்றியும் உன் படிப்புப் பற்றியும் ஒரு கடிதம் எழுது. 5

100

